ஸ்ரீரஸ்து:

ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:. ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஆஸ்திகர்களுக்கு நித்யாநுபாவ்யமான

# வேதாந்த தேசிக வைபவம்

ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ஸ்ரீகாஞ்சீ
பிரதிவாதி பயங்கரம் அண்ணங்க
ராசாரியர் பலவகையாராய்ச்சிகளுடன்
எழுதியது.

சென்னை விநோதன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பட்டது.

கிடைக்குமிடம்:—க்ரந்தமாலா ஆபீஸ்,
சின்னகாஞ்சீபுரம்.

1962 பிலவ ஹ பங்குனி விசாகம் விலை 75 ந. பை.

# அடியேன் செய்யும் விண்ணப்பம்

அப்பய தீக்ஷிதர் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு வியாக்கியானமாக நயமயூக மாலிகை யென்றொரு கிரந்த மியற்றியுள்ளார். இது தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டுமுள்ளது. இது அவருடைய ஸ்வகீய மதாநுஸாரேண இய றப்பட்டதன்று. பெரும்பாலும் ஸ்ரீபாஷ்யத்தை அநுஸரித்தே இயற்றப்ப டுள்ளது. இதை அவர் தாமே "லக்ஷ்மணார்ய ஹ்ருதயாநுஸாரிணீ ரச்யதே நயமயூகமாலிகா" என்கிற சுலோகத்தினால் தெரிவித்துள்ளார். ஸ்வமதத்தை விட்டுப் பரமத ப்ரக்ரியயா நூலெழுதிவைப்பது ஒரு விநோதமென்பர். இந்த ரீதியில் தேசிக திவ்ய சரித்திரத்தைப் பிறர் எழுதிவைத்திருக்கிறபடியே அழகிய வார்த்தைகளைக் கொண்டு எழுதிவைப்போமென்கிற எண்ணத்தினால் நாம் பன்முறையும் இச்சரிதையை நம்முடைய சைலியில் எழுதிப் பிரசுரித்திருப்ப துண்டு. ஆனாலும் அவற்றில் கட்டுக்கதைகள் பல சேர்ந்திருக்கின்றனவென் பதை நாம் தனிப் புத்தகங்களில் நெடுநாளாகவே விளக்கிவந்திருக்கிறோம். அத்தகைய புத்தகங்களும் உலகம் பரவியேயுள்ளன. நவீனர்களோ வென் னில், அப்பய தீக்ஷிதருடைய நயமயூகமாலிகா ப்ரக்ரியையில் நாமெழுதியுள்ள தேசிக சரித்திரத்தையே பரம ப்ரமாணமாகக் கொண்டு தங்களுடைய கற்ப னைக் கதைகள் ஊர்ஜிதமாகிவிட்டன வென்று குதூஹலிக்கின்றனர். அ[illegible]ல் நமக்கொரு ஹானியுமில்லை. அப்ராமாணிகமான கதைகளை நாம் நிரூபணம் செய்தேயிருக்கிறோம். அந்த நிரூபணங்கள் ஒரே புத்தகத்தில் இல்லாமல் பல் வேறு புத்தகங்களிலிருப்பதால் அவை யெல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்து உண்மையை உணர்ந்துகொள்வாரில்லையே! என்னும் வருத்தத்தினு லும், தத்வ ஜிஜ்ஞாஸுக்கள் எல்லா விஷயங்களையும் ஒரே புத்தகத்திற் கண்டு தெளிவு பெறவேணுமென்னு மாசையினாலும் இப்புத்தகம் வெளியிடலாகிறது.

இதில் நாமெழுதும் விஷயங்களெல்லாம் ப்ரமாண ப்ரதர்சநபூர்வக மாகவே யிருக்குமாதலால் ப்ராமாணிகர்களுக்கு இது பரமானந்த ஸந்தாயக மென்னுமிடத்தில் ஸந்தேஹமில்லை.

இங்ஙனம்.

P. B. அண்ணங்கராசாரியர்.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

அஸ்மத் குருபரம்பராப்யோ நம:

# வேதாந்த தேசிக வைபவம்

ஸ்ரீ காஞ்சி - பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தது

## திருவவதாரம்

வேதாந்த தேசிகன் திருவவதரித்தவிடம் "காசிமுதலாகிய நன்னகரியெல் என்றும் "முத்திதரும் நகரேழில் லாம் கார்மேனியருளாளர் கச்சிக்கு ஒவ்வா" காஞ்சி க்ஷேத்ரத்தில் திருத்தண்கா முக்கியமாங் கச்சி" என்றும் புகழப்பட்ட விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியின் பரிஸரமாகிய என வழங்கப்பெறும் அநந்த ஸோமயாஜிகள். திருத்தாயார் திவ்யஸ்தலம். இவர்க்குத் திருத்தகப்பனார் கிடாம்பி அப்புள்ளார். இராமா தோதாத்ரியம்மை. ஆசிரியர் (மாதுலரான) திருவேங்கடமுடையானுடைய திரு நுசப் பிள்ளான் என்பவரும் அவரே. ஸ்வாமி தாமே ஸங்கல் மணியே இவ்வாசிரியராய்த் தோன்றினதாகக் கூறுவர். ப்ரஸ்தாவனையில் தம்மைப்பற்றி அருளிச் செய்யு பஸூர்யோதய நாடக பத்மாஸநேக பரிசார விசேஷ ப்ர மிடத்து *வித்ராஸிநீ விபுதவைரிவரூதிநீநாம் கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யுக்தா, உத்ப்ரேக்ஷ்யதே பதஜனைருபபத்தி பூம்னா இங்கு அநுஸந்திக்கவுரியது. யதாத்மநேதி* என்றருளிய ச்லோகம்

## திருநாமகரணம்

இவ்வாசிரியர் திருவேங்கடமுடையானுடைய மஹோத்ஸவத்தின் அவப்ருத தினமாகிய புரட்டாசித் திருவோணத்தன்று திருவவதரித்தமை பற்றி ஸ்ரீவேங்கடநாத சர்மா என்று திருநாமம் சாத்தப்பெற்றார். வேதாந்தாசார்யர் என்கிற திருநாமம் பிறகு பட்டப்பெயராகக் கிடைத்தது ஸ்வாமிக்கு. [கலி ௵ 4370, சாலிவாஹநசக ௵ 1191, கி. பி. 1268—விபவஸம்வத்ஸரத் தில் இவரது திருவவதாரமென்று பெரியார் நிரூபிக்கின்றனர்.] நூறு ஸம்வத்ஸரம் இவ்விபூதியில் எழுந்தருளியிருந்து திருநாட்டுக் கெழுந்தருளினராதலால் இற்றைக்கு ஏறக்குறைய 595 ஆண்டுகட்குமுன் இவ்வாசிரியரது ஜீவிதகாலம் என விளங்காநின்றது. இதில் மதிபேதமோ மதபேதமோ இருப்பதாகத் தெரிய வில்லை. இருக்க நியாயமுமில்லை.

## இளமையில் பெற்ற அநுக்ரஹமும் வித்யாப்யாஸமும்

இவ்வாசிரியர் தமது மாதுலராகிய அப்புள்ளாருடைய அதிமாத்ர ப்ரீதிக் குப் பாத்ர பூதரா யிருந்துவந்தார். நடாதூரம்மாளுடைய ஸந்நிதியில் ஸ்ரீ

பாஷ்ய காலக்ஷேபம் செய்துகொண்டிருந்த அவ்வாசிரியர், நாலைந்து பிராய முள்ள இவ்வாசிரியக் குழந்தையையும் உடன் அழைத்துக்கொண்டு காலக்ஷேப கோஷ்டிக்குச் செல்ல அம்மாள் இக்குழந்தையின் தேஜோ விசேஷத்தையும் ப்ரதிபாப்ரபாவத்தையும் நோக்கி வியந்து "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷகடாக்ஷம் செய்தருளினார். இவ்விஷயம் இவ்வாசிரியர் தம்மாலேயே அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் "ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்த்ருஷ்டேந ஸர்வம்ஸஹநிசிததியா வேங்கடேசேந" என்று பணிக்கப்பட்டது. உரிய காலங்களில் சௌளோபநயநாதி ஸகல ஸம்ஸ்காரங்களும் அடைவே செய்யப்பெற்ற இவர் வேதங்களை ஓதத் தொடங்கினர். வேதமோதின திறமையைப் பற்றி ஆசார்ய சம்புவில் கூறியுள்ளவொரு சுலோகம் மிக அற்புதமானது. "அஹ்நாய வேதாநசிலாந் ஆசார்யாதக்ரஹீ தஸௌ. புநருச்சாரணுகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம்" என்பதாம். வேதத்தில் வேஷ்டந பதங்கள் என்று சிலவுண்டு. [ப்ரஜாபதிரிதிப்ரஜா - பதி:; பாகதேயே நேதி பாக - தேயேந; அக்நிஷ்டோமஸாம மித்யக்நிஷ்டோம - ஸாமம்.] என்பவை போன்ற பதங்கள் வேஷ்டநபதங்களாகும். அவை இரட்டித் திரட்டித்தே ஓதவேண்டியவையாதலால், அத்தகைய வேஷ்டநபதங்களில் மாத்திரம் ஸ்வாமிக்குப் புநருச்சாரணம் ப்ராப்தமாயிற்றே யல்லது மற்றைப் படியுள்ள பதங்களையெல்லாம் ஸக்ருதுச்சாரண மாத்ரத்திலேயே க்ரஹித்தருளினரென்று இவருடைய அஸாதாரணமான க்ரஹணதாரண படுத்வம் கூறியவாறு. இவ்வண்ணமாகவே வேதாங்கமாகவுள்ள ஸகலசாஸ்த்ரங்களையும் மாதுல ஸகாசத்திலேயே இருபது திருநக்ஷத்ரத்திற்குள் அதிகரித்து, மந்த்ரவிசேஷங்களையும் உபதேசம் பெற்று நிபுணராக விளங்கிவருகையில், ப்ராப்தகாலத்திலே க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்து ஆஹிதாக்நியாய் ஸ்ரீ காஞ்சியிலேயே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரப்ரவசனங்கள் செய்தருளாநின்றார்.

## இடையில் முக்கியமானதொரு விஜ்ஞாபனம்

அறுநூறு ஆண்டுகட்கு முன்பெழுந்தருளியிருந்த ஸ்வாமியின் சரித்திரத்தை நாம் சிறந்த ஆதாரங்கொண்டே எழுதவேண்டும். இக்காலத்தவர்கள் எழுதிய சரித்திர நூல்கள் நாலைந்து காணப்படுகின்றன. அவை பரஸ்பர விருத்தங்களென்றும் ப்ராமாணிகமான ஆதாரமுடையனவல்ல வென்றும் எழுபது ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு ஸ்ரீ காஞ்சீபுரத்தில் வாழ்ந்த ஜகத்விக்க்யாதரான ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் சிஷ்யர்களாலும், திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியராலும் காரண விசேஷ நிருபணங்களுடன் எழுதி வெளியிடப்பட்டிருப்பதால் விச்வாஸ்யமான தேசிக சரித்திர நூல் அரிதாகவேயுள்ளது. கீழ்ச்சொன்னோம் ப்ரஸ்தாவித்த ஆசார்ய சம்புவானது மிகவுயர்ந்த நூல். இதற்கு வேதாந்தாசார்ய விஜயமென்னும் திருநாமம் ப்ரஸித்தமானது. இது ஸம்ஸ்க்ருத நூலாதலால் இதில் ப்ரக்ஷேபசங்கைக்கு அவகாசமில்லை. அதை நாம் இளமையில் பாடமாகவாசித்திருந்தோம். அதில் நமக்கு மஹத்தான கௌரவப்ரதிபத்தியுண்டு. தேசிகனோடு விகல்பிக்கலாம்படியான வாக் வைபவத்தையுடைய வொரு மஹாவித்வத் கவிவரேண்யரே அந்த க்ரந்தத்தை இயற்றியவர். அரசாணிபாலை வேங்கடாத்வரியின் சம்பூக்ரந்தங்

களிற் காட்டிலும் மிகவுயர்ந்தது அது. அதில் இதராசார்ய தூஷணமென்பது அடியோடு இடம் பெறாதோடு தேசிகனுக்கு ப்ராமாணிகமாக எவ்வளவு சரித்திரமுள்ளதோ அவ்வளவே அதில் நிபந்திக்கப்பட்டுள்ளது. அதில் காவ்ய ஸரணிக் கேற்ப வர்ணனைகளாகவும் உத்ப்ரேக்ஷைகளாகவுமுள்ள பாகங் களைத் தள்ளி சரித்ரபாகமாகவுள்ளதை மாத்திரம் தொகுத்தால் இங்கே நாம் காட்டுகிற அளவுதான் உண்மையான தேசிக சரித்திரம் தேறுகிறது. அதை அநுக்ரமமாகக் காட்டுகிறோம் காண்மின் :

## ஆசார்ய சம்புவில்காணும் தேசிக சரித்திரம்

அந்த சம்பூக்ரந்தத்தில் ஆறு ஸ்தபகங்கள் உள்ளன. முதல் ஸ்தபகத்தில் - விபுலமான மங்களாசரணம், வேதாந்தஸூரி சரித்ரம் சொல்லுகிறே னென்ற ப்ரதிஜ்ஞை, க்ரந்த கர்த்தாவான தம்முடைய வம்சாவளிப்ரசம்ஸை, தேசிகனுடைய அவதாரஸ்தலமான காஞ்சிபுரியின் வர்ணனை, தேசிகனுடைய பிதாமஹரான புண்டரீகாக்ஷயஜ்வாவின் வர்ணனை - ஆக இவ்வளவு உள்ளது.

இரண்டாவது ஸ்தபகத்தில் - அந்த 'புண்டரீகாக்ஷயஜ்வாவின் திருக் குமாரரும் தேசிகனுடைய திருத்தகப்பனருமான அநந்த ஸூரியின் ப்ரசம்ஸை, அவருடைய தேவியார் கர்ப்பவதியானது, திருமலைமால் திருமணி அந்த கர்ப்பத் திலே வந்து ஆவேசித்தது - ஆக இவ்வளவு சொல்லப்பட்டது. (இனிமேல் தான் திருவவதாரம் தொடங்கி சரித்திரம் கூறுதல்.)

மூன்றாவது ஸ்தபகத்தில்—1. தேசிகனுடைய திருவவதாரம், 2. பால்ய வர்ணனம், 3. கடாதூரம்மான் பக்கலிலே ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் செய்து வரும் தம்முடைய மாதுலரான கிடாம்பியப்புள்ளாரோடு கூட தேசிகனும் அம்மான் திருமாளிகைக்குச் சென்று அந்த அம்மானுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றது, 4. காலத்தில் உபநயநாதிகள் நடந்து வேதாத்யயநமும் ஸாமாந்ய சாஸ்த்ராத்யயநமும் வெகு விரைவில் செய்தது, 5. விவாஹம் செய்துகொண் டது, 6. ஹயக்ரீவ மந்த்ரத்தை ஜபித்தது, 7. வாதிகளை வென்றது, 8. ந்யாய ஸித்தாஞ்ஜநம் முதலிய சில க்ரந்தங்கள் ஸாதித்தது. 9. கவிதார்க்கிக கேஸரி யென்கிற விருது பெற்றது, – ஆக இவ்வளவு சொல்லப்பட்டது.

நான்காவது ஸ்தபகத்தில் 10. தேவப் பெருமாளுடைய வைசாகோத்ஸவ ப்ரசம்ஸை. 11. அவ்வுத்ஸவத்தில் கருடோத்ஸவ தினத்தில் பஹுமானிக்கப் பெற்ற தேசிகன் வரதராஜ பஞ்சாசத்ஸ்தோத்ரமருளிச் செய்தது: 12. வைசா கோத்ஸவஸேவார்த்தமாக வந்திருந்த வித்யாரண்யயதி தேசிகனுடைய கவி தார்க்கிக ஸிம்ஹபிருதத்தைப் பொறுமல் இவரை வாதத்திற்கிழுக்க, ப்ரசண்ட வாதம் நடத்தி அந்தயதியை பங்கப்படுத்தினது. 13. பிறகு புரட்டாசி மாஸம் அணித்தானவாறே திருவேங்கடமுடையானுத்ஸவம் ஸேவிக்கக் குதூஹலங் கொண்டது ஆக இவை சொல்லிற்று.

ஐந்தாவது ஸ்தபகத்தில் –14. தேசிகனுடைய திருவேங்கடயாத்திரை. 15. திருமலையில் தயாசதகமருளிச் செய்தது. 16. முன்பு காஞ்சீபுரியில் பராஜி தராய்ப்போன வித்யாரண்யர் விஜயநகரத்தரசனிடம் சேர்ந்திருந்து: அந்தராஜா வுக்கு இவருடைய அப்ரமேயமான வைபவத்தை யெடுத்துரைத்து இவரை

அங்கே வரவழைத்து விசேஷ ஸன்மானமளிக்க ராஜாவின் அநுமதியையும் பெற்று அப்போது திருவேங்கட மலையிலே வாழ்கின்றவிவர்க்குச் செய்தி யனுப்ப, இவர் வைராக்ய பஞ்சகத்தை யெழுதியனுப்பித் தம்முடைய அப்ரதிம மான வைராக்யத்தைக் காட்டி நின்றது. 17. பிறகு வடதிசை நோக்கிச் சென்று கங்காநதி தீர்த்த யாத்திரை செய்தருளி மீண்டு காஞ்சீபுரி வந்து சேர்ந்து சிலநாள் அவ்விடந்திலேயே வாழ்ந்த செய்தி. 18. விஜய நகரத்தரசனுடைய ஆஸ்தானத்தில் வித்யாரண்யர்க்கும் அக்ஷோப்ய முனிக்கும். த்வைதாத்வைத விவாத கோலாஹலம் நடக்க, அவ்விருவருடைய வாதங்களில் எவருடைய வாதம் ஸமீசீநமானதென்று முடிவு தெரிந்துகொள்ள விரும்பிய அரசன் இருவருடைய வாதங்களையும் எழுதச்செய்து வாங்கி ஆள் மூலமாக தேசிகனுக்கனுப்பி மத்தியஸ்தாபிப்ராயம் தெரிவிக்கவேணுமென்று வேண்ட, தேசிகன் "அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யமக்ஷோப்ய முநிரச்சிநத்." என்றொரு ச்லோகமியற்றி யனுப்ப, அதை ராஜா பெற்று மிக வுகந்து அக்ஷோப்ய முனியை ச்லாகித்தானென்பது. 19. பிறகு ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க விரும்பிய தேசிகன் ஸ்ரீ காஞ்சியில் நின்றும் புறப்பட்டு வழியிடையில் திருவஹீந்திரபுரம் சென்று சேர்ந்து அங்கு நெடுங்காலம் வஸிக்கவேணுமென விரும்பி ஔஷதாத்ரியில் ஹயக்ரீவமந்த்ராவ்ருத்தி பூர்வகமாக ஹயக்ரீவோபாஸனை செய்து வருகையில் ஒருநாள் ஜபஸமயத்தில் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட பகவானுடைய நியமனத்தினால் ஹயக்ரீவஸ்தோத்ரம், தேவநாயகபஞ்சாசத், கோபாலவிம்சதி, மஹாவீர கத்யம், அச்யுதசதகம், பரமதபங்கம், விரோத பரிஹாரம் முதலான க்ரந்தங்களை யியற்றினது. 20. பிறகு ஸ்ரீமுஷ்ணத்திற்கெழுந்தருளி அங்கு நின்றும் ஸ்ரீரங்காபிமுகமாக எழுந்தருளுகையில் ஸ்ரீரங்கத்தில் நின்றும் வந்து கொண்டிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கு துர்வாதிவிஜயார்த்தமான ஆஹ்வாந பத்ரிகையை ஸமர்ப்பிக்க, விரைந்து சென்று கோயில் சேர்ந்தாரென்பது சொல்லிற்று.

ஆறுவது ஸ்தபகத்தில்—21. ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனை ஸேவித்து பகவத்த்யாந ஸோபாநம் முதலான ஸ்துதிகளருளிச் செய்தது, 22. அங்குள்ள பாகவதர்களின் வேண்டுகோளுக்கிணங்கி க்ருஷ்ணமிச்ர னென்கிற துர்வாதியோடு பதினெட்டுநாள் வாதயுத்தம் செய்து வெற்றி பெற்றது, 23. வேதாந்தாசார்யரென்றும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர ரென்றும் விருதுகள் பெற்றது, 24. சததூஷணீ அதிகரண ஸாராவளி தத்வமுக்தாகலாபம் ஸர்வார்த்த ஸித்தி ஸேச்வரமீமாம்ஸை ஸங்கல்ப ஸூர்யோதயம் யாதவாப்யுதயம் தாத்பர்யசந்திரிகை மீமாம்ஸா பாதுகை தத்வடீகை ஸ்ரீஸ்துதி பூஸ்துதி யதிராஜஸப்ததி முதலான பலபல நூல்களை யியற்றினது, 25. கவித்வச் செருக்குடன் வந்தவொரு துர்வாதியின் அவலேபத்தை யகற்ற பாதுகா ஸஹஸ்ரமருளிச் செய்தது, 26. ஸமஸ்யா ஸஹஸ்ர பூரணம் செய்தது, 27. அப்போது அங்கு யவநோபப்லவ முண்டாக, அது தொலைய அபீதிஸ்தவமருளிச் செய்தது, 28. அங்கு நின்றும் புறப்பட்டுத் திருவணையாத்திரை செய்தது, 29. ஆழ்வார் திருநகரி திருநாராயணபுரம் முதலானவை ஸேவித்துக் கொண்டு காஞ்சீபுரம் வந்து சேர்ந்தது, 30. அங்கு ஸ்வாமி

யினுடைய பிருதாவளிகளைப் பொருத வொரு மாந்த்ரிகன் வந்து பாம்பாட்டப்
போராட்டம் செய்ய, கருட தண்டகமருளிச் செய்து அவன் செருக்கையடக்
கினது, 31. பிறகு திருக்குமாரர் அவதரித்தது. 32. ரஹஸ்யத்ரயஸாரமியற்
றியது - ஆக இவ்வளவு சொல்லி க்ரந்தம் தலைக்கட்டப் பட்டது.

மேலே விவரித்தபடி தேசிக சரித்திர ஸம்பந்தமாக முப்பத்திரண்டு விஷ
யங்களை அந்நூலிலுள்ளன. சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாதரக்ஷையைக் கட்டி
ஸ்வாமி திருமுடியிலே படும்படி தொங்கவிட்டார்களென்றும், ச்ராத்தத்தில்
நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்தவர்கள் வஞ்சித்துவிட்டார்களென்றும்,
ஸந்நிதியில் பெருமாளை ஸேவித்துக் கொண்டிருக்கும் போது ஏகாதசியன்று
பொங்கலைக் கொணர்ந்து கொடுத்தார்களென்றும், திருமாளிகையிலெழுந்தருளி
யிருந்து க்ரந்தாவலோகநம் செய்துகொண்டிக்கையில் திருவடிகளைப் பிடித்
திழுத்துத் தெருவிலே விழவிட்டார்களென்றும் இப்படி பலவாறு நவீநர்கள்
எழுதியுள்ள சரித்திரங்களானவை பிறர்மீது அவத்ய மேறிடுவதற்காக நிராதார
மாகக் கல்பிக்கப் பட்டவை. இதனால் பிறர்பால் அவத்ய மேறுவது மாத்திர
மன்று. ஸ்வாமி தேசிகனுக்கும் மிகுந்த கௌரவ ஹாநி ஏற்படுகிறதென்பதை
விவேகிகள் எளிதாக உணர்வர்கள்.

* ராமோ ராமே ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:* என்றுப்போலே
“வேதாந்த ஸூரிர் நிகமாந்தஸூரிஸ் த்ரய்யந்தஸூரி: கவிதார்க்கிகேந்த்ர:,
இத்யேவ ஸர்வத்ர ஸதைவ ஸர்வே ஜநாஸ் ஸமந்தாத் கதயந்த ஆஸந்” என்று
ச்லோகமியற்றிக் குலாவவேண்டியிருக்க, (அதாவது) உலகமெல்லாம் தம்மையே
வாய் வெருவும்படியாகத் தமது திருக்குணங்களாலே எல்லாரையும் ஆவர்ஜநம்
செய்து கொண்டு எழுந்தருளியிருந்தாரென்று உள்ளபடி பெருமைகளை
ப்ரசாரம் செய்யவேண்டியிருக்க, அதுசெய்யாதே ஸ்வபக்ஷர்களும் விபக்ஷர்
களுமான எல்லார்க்கும் வெறுக்கத் தக்கவராக இருந்துவந்தாரென்று ப்ரசாரம்
செய்வதனால் ஸ்வாமிக்கு லாகவமன்றோ உண்டாகிறதென்பதைச் சிறிது மதிய
இல்லாதே, வைபவ க்ரந்தமென்று பெயரிட்டு லாகவமயமாக எழுதிவைப்பவர்
களைப்பற்றி மிகவும் சோகிக்கவேண்டியது தவிர வேறுண்டோ?

ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்காக வரிக்கப்படுமவர்கள் ஆப்தபந்துக்களா
யிருப்பர்களே தவிர வழிப்போக்கர்களாயிருக்கமாட்டார்களே. இதிலென்ன
ஸம்சயம்? அப்படி ஆப்தபந்துக்களானவர்கள் நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து
ஸமயத்தில் வாராதே வஞ்சித்து விட்டார்களென்று கதையெழுதினால் இது
மஹாவைபவசாலியான தேசிகன் விஷயத்திலே பொருந்துமாவென்று இதுகூட
ஆராய்வாரில்லையே. அஸூயுக்களின் கலஹவார்த்தைக்கிணங்கி ஒருவர்
வஞ்சித்துவிட்டாலும் மூவருமே வஞ்சித்துவிட்டார்களென்று கதையெழுது
வது வியப்பினும் வியப்பே. அப்பயதீக்ஷிதருடைய சரித்திரத்தில் காணும்
கதை இது. சாஸ்த்ர கர்ஹிதமான பல காரியங்களைச் செய்து பதிதர்களென்று
ஒதுக்கப்பட்டவர்கள் சிலர் செய்யும் ச்ராத்தங்களில் இப்படிப்பட்ட ஸம்பவம்
விளைவது கேட்டதுண்டு, கண்டதுமுண்டு; பதிதபாவநரான ஸ்வாமி திறத்
திலா இப்படி ஹேயமான கதையைத் தொடுப்பது? இவர்களது கொள்கை

யின்படி இக்கதை உண்மையாக நடந்திருக்குமாகில்..........மேலே என்ன சொல்லுவதென்று தோன்றவில்லை. தேசிகனுக்குப் பெருமையென்று நவீனர்கள் நவீனமாகக் கல்பனை செய்து எழுதும் விஷயங்கள் இவ்வளவு ஹேயமாயன்றோ இருக்கின்றன. எந்த ஆசார்யர்களின் திவ்யஸூக்திகளை ஸ்வாமி தலையாலே சுமந்து ஸதாஸர்வதா அவற்றையே அநுஸந்தானம் பண்ணிக் கொண்டும் தம்முடைய க்ரந்தங்களிலும் தழுவிக் கொண்டும் போந்தாரோ அந்த ஆசார்யர்களை ப்ரதிபக்ஷிகளாகக் கொண்டிருந்தாரென்றும், அவர்களுடைய அந்த திவ்ய ஸூக்திகளைக் கண்டிப்பதே காரியமாக இருந்தாரென்றும் இப்படிப் பட்ட அபத்தங்களையே நிரப்பியன்றோ நவீனர்கள் தேசிகவைபவமென்றும் தேசிக ப்ரபாவமென்றும் தேசிக திவ்ய சரித்ரமென்றும் எழுதி வைப்பது. இந்த அபத்தங்களையெல்லாம் வெகு தூரத்தில் விலக்கி ப்ராமாணிக ஹ்ருதயங்கமமான சரித்திரங்களையுணர விரும்ப வேண்டும்.

பக்தி விசேஷத்தினால் ஆசார்யருக்கு அஸ்யாத்ருசமான வைபவங்களைப் பிரசுரஞ்செய்ய வேணுமென்று குதூஹலங்கொண்டு சில பல கதைகளைக் கற்பனை செய்து சிலர் எழுதி வைத்திட்டால் அதையநுஸரித்துப் பின்புள்ளவர்கள் எழுதி வந்தால் நாளடைவில் அந்த கல்பித கதைகள் மெய்யென்று நினைக்க நேர்ந்து விடுகிறது. அந்த கல்பித கதைகளில் அநுபபத்தி ஒன்றுமில்லையாகில் பக்திமான்கள் உகந்தேயிருக்கலாம். இதர ஆசாரியர்களுக்குப் பழிப்பாய் ப்ரக்ருத ஆசார்யருக்கும் பழிப்பாய்த் தலைக்கட்டுகின்ற அக் கல்பனைக் கதைகளால் பரிஹாஸ்யதையே தேறுவதனால் விவேகிகளாயுள்ளவர்கள் கல்பனைக் கதைகளை விலக்கியே தொலைக்கவேண்டும். இன்னின்ன கதைகள் கற்பனையென்று நாம் நெடுநாளாகவே தெரிவித்து வருவதால் பிராமாணிகர்களாயுள்ளவர்கள் இவை அசைக்கமுடியாத விமர்சங்களே யென்று உகந்து ஏற்றுக் கொள்ளுகிறார்கள். இக்காலத்து வித்வான்களில் சிறந்த விவேகியான ஸ்ரீ. உ.வே. உப்பிலியப்பன் ஸந்நிதி நவநீதம். ஸ்ரீ ராமதேசிகாசார்யரால் பரிசோதித்து ஸமீபகாலத்தில் வெளியிடப்பட்ட ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தின் முகப்பில் ஸ்ரீ தேசிக சரித்திரம் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது. அதில் தலைமேல் அவர் எழுதியிருப்பதாவது,

“ஸ்ரீ தேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந்துள்ளது. அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே.” என்று.

இங்ஙனே உள்ளபடியெழுதி வெளியிட்டுள்ளார். “வேறுபாடுகாணப்படுகிறது” என்றெழுதாமல் “வேறுபாடு காணப்படுவது உண்மையே” என்றெழுதியிருப்பதை நிரூபகர்கள் விமர்சிக்க வேணும். எதனால் அவர் அப்படியெழுத நேர்ந்ததென்றால், அவர் 1944ஆம் வருஷத்தில் வெளியிட்ட தேசிகப் பிரபந்தவுரையில் D. R. அட்வகேட் தேசிக சரித்திரமெழுதுகிற வியாஜமாகப் பூருவாசாரியர்களை தூஷித்திருந்தது காரணமாகவே விவாத நூல்கள் வளரத் தொடங்கினவென்பதை நாம் பலகால் பிரசுரித்திருக்கிறோம். உண்மையில் அந்த அதிக்கணச் செயல்தான் விவாத வளர்ச்சிக்குக் காரணம். மேலே குறித்த நவீ

தம் நண்பர் இதை நன்கு தெரிந்து கொண்டதனால் உண்மையை இசைந்து கொள்வதுதான் உரியதென்று கொண்டு அங்ஙனம் எழுதினார். அவ்வளவேயுமன்றிக்கே, மேலே சரித்திரத்தில் பாதுகாஸஹஸ்ர மவதரித்ததைப் பற்றியெழுதுகையில் நவீனர்களின் கற்பனைக் கதைகளையும் D. R. கற்பனைக் கதையையும் அறவே யொழித்து, நாம் பலகால் தெரிவித்திருந்த உண்மையைத் தழுவி உள்ளவாறெழுதியுள்ளார். அவரும் ஸங்கேதபீதியினால் சில விஷயங்களை மட்டும் பழையபடி யெழுதியிருந்தாலும் பெரும்பாலும் பிராமாணிக வழியில் சார்ந்திருப்பது உகக்கத்தக்கது. நிற்க, நாம் தொடங்கிய தேசிகவைபவம் இனி.

## தேசிகன் திருவயிந்திரபுரமெழுந்தருளியது

இங்ஙனே நிகழ்ந்துவருகையில் ஒரு நாள் தென்திசைத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்யத் திருவுள்ளங்கொண்டு பேரருளாளனது நியமனம் பெற்றுப் புறப்பட்டெழுந்தருளுகையில், பரமபாவனமான கருட நதியின் கரையில் தெய்வநாயகனுடைய ஸந்நிதாந ஸாரஸ்யத்தையும் ஓஷதாத்திரியின் வாய்ப்பையும் நோக்கி அவ்விடத்திலே சிலகாலம் வஸிக்கத் திருவுள்ளமாய், அத்திருமலையின்கண் வீற்றிருந்து முன்பு ஸ்வாசார்ய ஸந்நிதியிலே பெற்றிருந்த வைநதேய மந்திரத்தை நியதராய் ஆவ்ருத்தி பண்ணிக்கொண்டிருக்க, ஒருநாள் ஸுப்ரஸந்நராய் ஸாக்ஷாத்காரம் தந்தருளின பெரிய திருவடி ஸ்ரீ ஹயக்ரீவ மந்த்ரத்தை யுபதேசித்துச் செல்ல, பிறகு ஆங்கு அழகிய சிங்கர் திருமுன்பே ஹயக்ரீவ மஹாமந்த்ரத்தை நெடுநாள் ஜபித்துக் கொண்டெழுந்தருளியிருக்க, வெள்ளைப் பரிமுகரும் ஸுப்ரஸந்நராய்க் காட்சி தந்து தம்முடைய வாக்கின் அம்ருதத்தையூட்டி அநுக்ரஹித்து மறைந்தருள, ஆசிரியர் பரமாநந்த பாராவார நிமக்நராய் க்ருதார்த்தராய் எழுந்து ஹயக்ரீவஸ்தோத்ரம், கருடபஞ்சாசத் என்ற இரண்டு ஸ்தோத்ரங்களை விண்ணப்பஞ் செய்து, தெய்வநாயகனையும் திருவடி தொழுது, தேவநாயக பஞ்சாசத், அச்யுதசதகம் (ப்ராக்ருத பாஷாமயஸ் தோத்திரம்), கோபால விம்சதி, (ரகுவீரகத்ய மென வழங்கப்படுகிற) மஹாவீர வைபவம் என்ற ஸ்தோத்ரங்களைப் பணித்தருளினார்.

## திருக்கோவலூர் மங்களாசாஸனம்

பிறகு தெய்வநாயகப் பெருமானிடம் நியமநம் பெற்றுக்கொண்டு, "பாவருதமிழால் பேர் பெறு பனுவற் பாவலர் பாதிநாளிரவில், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்கிற படியே பொய்கை பூதம் பேயாழ்வார்கள் கூடிக் குலாவி அநுபவித்து மகிழ்ந்த திருப்பதியாகிய திருக்கோவலூரில் ஆயனாரைத் திருவடி தொழ விரும்பி அங்கெழுந்தருளிச் சிலகாலம் வாழ்ந்து அப்பெருமான் விஷயமாக "தேஹளீசஸ்துதி" என்கிற ஸ்தோத்ரமருளிச் செய்தார். அதில் 6, 7, ச்லோகங்களில் முதலாழ்வார்கட்கும் எம்பெருமானுக்கும் நேர்ந்த பரிமாற்றம் வெகு அழகாகப் பேசப்பட்டுள்ளது.

(1) [தீபேந கேநசித்சிதருசா நிசிதே ஸ்நேஹோபபந்ந பரிசுத்த குணப்ரிதேந, தஸ்ராவகாசநிபிடம் தத்ருசுர் பவந்தம் ஸ்வாத்யாயயோகநயநாச் சுசய: கவீந்த்ரா:] யோகிகளில் தலைவராகிய முதலாழ்வார்களென்னும் செந்தமிழ்க்

கவித்தலைவர்கள் ஒருநாள் நள்ளிரவில் விலக்ஷணமான வொரு விளக்கேற்றி ஹ்ருதயத்தினுள்ளே ஆயனரைக் கண்டு கொண்டனர் என்பது கருத்து.

(2) [காஸார பூர்வ கவிமுக்ய விமர்த ஜந்மா பண்ய(புண்ய)தடேக்ஷுஸமா பகஸ்யரஸோ பஹுலஸ்தே, த்வத்பாதபத்மமது த்வதநந்யபோக்யே நூநம் ஸமாச்ரயதி நூதந சர்க்கராத்வம்] பெண்ணையாற்றங்கரையில் கரும்புபோல் வளர்ந்திராநின்ற ஆயனர், பொய்கையாழ்வார் முதலான மூவரோடும் நெருக்குண்டு பிழியப் பட்டதனால் உண்டான ரஸமானது [விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:] என்ற சுருதியின்படி அவரது திருவடித்தாமரைகளி லுண்டான தேன் பெருக்கில் சர்க்கரை கலந்தது போலும் என்றவாறு. இந்த இரண்டு ச்லோகரத்நங் களும் பக்தர்களுக்கு நித்யாநுஸந்தேயங்கள்.

## மீண்டும் கச்சிப்பதி யெழுந்தருளல்.

இங்ஙனம் திருக்கோவலூரில் சிலகாலம் எழுந்தருளியிருந்து அங்குள் ளாருக்கு வேதாந்தக்ரந்த ப்ரவசநமும் செய்தருளி, பிறகு யாத்திரையடைவே ஸ்வாவதாரஸ்தலமான பெருமாள் கோவிலுக்கு மீண்டெழுந்தருளி அங்கு விசேஷத: க்ரந்தப்ரவசநம் செய்தருளுங்காலத்தில், பெருந்தேவித் தாயார் விஷயமாக ஸ்ரீ ஸ்துதியையும், பேரருளாளன் விஷயமாக வரதராஜ பஞ்சாசத் என்னும் ஸ்தோத்ரத்தையும், யதோத்தகாரி யெம்பெருமான் விஷயமான வேகாஸேது ஸ்தோத்ரத்தையும், அட்டபுயகரத்தெம்பெருமான் விஷயமான அஷ்டபுஜாஷ்டகத்தையும், விளக்கொளியெம்பெருமான் விஷயமான சரணுகதி தீபிகையென்கிற தீபப்ரகாசஸ்தோத்ரத்தையும், வேளுக்கை யெம்பெருமான் விஷயமான காமாஸிகாஷ்டகத்தையும், திருப்புட்குழிப் போரேற்றுப் பெருமாள் விஷயமான பரமார்த்தஸ்துதியையும் அருளிச்செய்தார்.

## வைராக்ய பஞ்சகம் அவதரித்த விசேஷம்

*விஷ்ணுகண்டாவதார பூதரான நம் வேதாந்த தேசிகன் ஸர்வதோமுக மான ஞானம் படைத்தது போலவே விரக்தியையும் லோகவிலக்ஷணமாகப் பெற்றவராதலால் கூரத்தாழ்வானைப் போலவே தாமும் உஞ்சவ்ருத்தியையே கொண்டு பெருமாள் திருவாராதநத்தைக் குறையற நடத்திக்கொண்டு செந்தமி ழும் வடமொழியும் திகழ்ந்தநாவர்க்கு உபயவேதாந்த க்ரந்தப்ரவசநம் செய் தருளா நின்றுகொண்டு *கார்மேனி யருளாளர் கச்சிப்பதியிலே பேரருளாளனை மங்களாசாஸநஞ் செய்துகொண்டெழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் வித்யா ரண்ய ரென்பவர் விஜயநகர மஹாராஜனிடத்தில் மிகுந்த வாஸ்ல்யம் பெற்றுப் பல பல வித்வான்களை ஆதரிப்பதற்குரிய ஸௌகர்யங்களை யுடையரா யிருந்த தனுல் நம் ஸ்ரீ தேசிகசிகாமணியை ஸ்மரித்து இவருடைய ஏழைமையைப் போக்கிச் செல்வச் சிறப்பையுண்டாக்கக் கருதி அந்த விஜய நகராதீசனிடத் திற்கு எழுந்தருளுமாறு ப்ரார்த்தநா பத்திரிகையை அனுப்ப, அதனைக் கடாக்ஷித் தருளின ஸ்வாமி தேசிகன் தம்முடைய நிஷ்டா விசேஷங்களை அந்த வித்யா ரண்ய ஸ்வாமி அறிந்து வைத்தும் வினுக இப்படி ஆஹ்வாநம் பண்ணுகிறரே! எனத் திருவுள்ளம் நொந்து, அவருக்கு [illegible] உத்தரமாக

ந மே பித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம்!
அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம்.

என்கிற ச்லோகத்தை யெழுதியனுப்ப, அவரும் அதைக் கண்டு, தேசிகனிடத்தில் அவர்தாம் வைத்திருந்த ப்ரீதிபதிசயத்தினால் எப்படியாவது இவர்க்கு அபரிமித த்ரவ்யலாபம் பண்ணிவைக்க வேணுமென்ற ஆசையினால் மீண்டும் மிக நிர்ப்பந்தித்துப் பத்திரிகை விடுக்க, [மஹாராஜன் மூலமாகவும் சிறந்த மரியாதையுடன் ஆஹ்வாநம் பெறுவிக்க] அப்போது ஸ்வாமி அநுக்ரஹித்தருளியனுப்பிய ச்லோக ரத்னங்கள் வைராக்ய பஞ்சகமென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும்.

## ஸ்வாமியின் ஓர் அத்புத சேஷ்டிதம்

ஒரு மாயாவாதிஸந்ந்யாஸி கச்சியில் வந்து ஸ்வாமியோடு தர்க்கித்துத் தோல்வி பெற்றதனால் வருந்தி இவர்க்கு ஏதேனும் இன்னல் விளைக்க வேணுமென்றெண்ணித் தனக்குள்ள க்ஷுத்ரமந்த்ரவாத சக்தியினால் ஸ்வாமி திருமாளிகைக்கு அருகிலுள்ளதொரு குளத்தில் தண்ணீரருந்தி அது ஸ்வாமியின் திருவுதரத்திலே புகுந்து மஹோதர மாகும்படி செய்ய, இந்த மாயச் செய்கையை அறிந்த ஸ்வாமி தம் திருமாளிகை வாசல் தூணை நகத்தினால் கீறியருள அதில் நின்றும் தண்ணீர் பெருக, ஸ்வாமியின் திருவுதரம் பழையபடியாயிற்று. இது கண்ட அந்த மாயாவாதி, ஸ்வாமியின் சக்தி விசேஷத்திற்கு மிக வியந்து திருவடியில் தொழுது சென்றான்.

## கநகதாராஸ்தவ மென்னும் ஸ்ரீஸ்துதியின் பெருமை

ஒரு நாள் ஒரு ப்ரஹ்மசாரி, ஸ்வாமி ஸந்நிதியில் வந்து தெண்டனிட்டு 'அடியேன் மிகவும் அகிஞ்சநன்; விவாஹம் செய்துகொள்ள விருப்பமுடையேன். ஸ்வாமி த்ரவ்யஸஹாயம் செய்தருள வேணும்" என்று ப்ரார்த்தித்தான். அது கேட்டு ஸ்வாமி புன்முறுவல் செய்து "பிள்ளாய்! நானோ உஞ்சவ்ருத்தி பண்ணிப் பெருமாள் திருவாராதனம் நடத்துகிறவன் என்பது உனக்கு நேரில் தெரியும்; இப்படியிருக்க விசேஷ தனிகர்களை விட்டு என்னிடம்வந்து பொருள் யாசிப்பதற்குக் காரணமென்ன?" என்று வினவ, "ஸ்வாமி திருவுள்ளம் பற்றினால் அலப்யமானதொன்றுமில்லை யென்றும் வேண்டிய பொருள் கிடைக்குமென்றும் பல பெரியோர் சொல்லக் கேட்டதனாலே ஸ்வாமியை ப்ரார்த்திக்கலானேன்" என்று அவன் விடை கூற, ஸ்வாமியும் அது கேட்டு 'அப்படியா? பாகவதர்கள் அங்ஙனம் அருளிய பக்ஷத்தில் தவறாது பொருள் கிடைத்தே தீரும்; இனி விசாரப்படாதே; ஸ்ரீஸ்துதியை அநுஸந்தானம் செய்துகொண்டு பெருந்தேவித் தாயாரை ப்ரதக்ஷிணம் செய்துவா; அநுக்ரஹமுண்டாகும்' என்று கூறி, ஏற்கெனவே பெருந்தேவித் தாயார் விஷயமாக அருளிச்செய்திருந்த ஸ்ரீஸ்துதி என்னும் தோத்திரத்தை அவனுக்குக் கண்டபாடம் செய்வித்தருளினார். அற்றைநாள் முழுதும் அந்த ஸ்துதியையே ஆவ்ருத்தி செய்துகொண்டிருந்து பிற்றை நாள் காலை ஸ்வாமி ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு பேரருளாளன் ஸந்நிதிக்கு மங்களாசாஸநார்த்தமாக எழுந்தருளும்போது அந்த ப்ரஹ்மசாரியும் ஸ்வாமியைப் பின் சென்று ஸ்ரீஸ்துதியைச் செவிக்கினியதாக அநுஸந்தித்துக்கொண்டே பெருந்தேவித்தாயாரை வலம்வர,

"ஆர்த்தத்ராணவ்ரதிபிரம்ருதாஸாரநீலாம்புவாஹை: அம்போஜாதாமுஷஸி மிஷதா மந்தராங்கைரபாங்கை:, யஸ்யாமஸ்யாம் திசி விஹரதே தேவி! த்ருஷ்டிஸ் த்வதீயா தஸ்யாம் தஸ்யா மஹமஹமிகாம் தந்வதே ஸம்பதோகா:. யோகாரம்பத்வரிதமநஸோ யுஷ்மதைகாந்த்ய யுக்தம் தர்மம் ப்ராப்தும் ப்ரதமமிஹ யே தாரயந்தே தநாயாம்! தேஷாம் பூமேர தநபதிக்ருஹா தம்பராத் அம்புதேர் வா தாரா நிர்யந்த்யதிகமதிகம் வாஞ்சிதாநாம் வஸூநாம்" என்கிற ச்லோகங்கள் அநுஸந்திக்கப்படுமளவில் தாயார் ஸந்நிதியில் திருமுன்பே ஸ்வர்ணதாரைகளின் வர்ஷம் வாய்த்திட, அனைவருங்கண்டு அதிசயித்தனர். பிரமசாரியும் க்ருதார்த்தனாய் விடைபெற்றுச் சென்றனன்.

## திருக்குமாரர் திருவவதரித்தல்

ஸகல வகைகளாலும் ஸ்வாமியை நிகர்த்தவரான ஒரு திருக்குமாரர் நளஸம்வத்ஸரம் ஆவணிமாதத்து ரோஹிணீநக்ஷத்ரத்தில் திருவவதரிக்க, அவர்க்கு வரதாசாரியர் என்று திருநாமமிடப்பட்டது. இவரும் ப்ராப்த காலங்களில் உபநயநாதி ஸம்ஸ்காரங்களைப் பெற்று ஸ்வாமி ஸந்நிதியிலேயே ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அதிகரித்து, விளக்கில் கொளுத்தின தீவட்டி போலே விளங்கி வந்தார். நயனாசார்யரென்றும் நயனவரதாசார்யரென்றும் குமார வரதாசார்யரென்றும் இவர் வழங்கப்பெறுவர்.

## ஸ்வாமி பிருதாவளிகள் பெறுதல்

ஸ்வாமிதேசிகனுக்கு வேதாந்தாசாரியர் என்றும், கவிதார்க்கிக கேஸரி என்றும், ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர் என்றும், ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்றும் இங்ஙனே பல பிருதுகள் ப்ரஸித்தமாய் நிகழ்ந்தன. இவற்றுள் வேதாந்தாசார்யர் என்கிற பிருது ஸ்ரீரங்கநாதனால் அளிக்கப்பட்டதென்னுமிடம் ஸ்வாமியின் திவ்ய ஸூக்திகளினாலேயே தெரியவருகின்றது; ஸங்கல்பஸூர்யோதய ப்ரஸ்தாவனையில் [ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ்ஞாலப்த வேதாந்தாசார்யபத:] என்றும், அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் [ஸ்வஸ்தி ஸ்ரீரங்கபர்த்து:] என்னும் ச்லோகத்தில் [தேந தேவேந தத்தாம் வேதாந்தாசார்ய ஸம்ஜ்ஞாம்] என்றும் அருளிச்செய்யப்பட்டுள்ளவை காண்க. ஸ்தோத்ர பாஷ்யத்தின் முடிவில் [ஸ்வகமிதி ஹரிதத்தம் யாமுநஸ்தோத்ரவ்ருத்த்யா வ்யாவ்ருணுத நிகமாந்தாசார்யகம் வேங்கடேச:] என்ற ச்லோகத்தில் ஹரிபதத்தினாலும், தயாசதகத்தின் முடிவில் [வேதாந்த தேசிகபதே விநிவேச்ய பாலம் தேவோ தயாசதக மேததவாதயந்மாம்] என்ற ச்லோகத்தில் தேவபதத்தினாலும் ஸ்ரீரங்கநாதனே விவக்ஷிக்கப் படுகிறானென்றும் கொள்ளக்கடவது. தர்மியைக்யத்தால் ஸமந்வயம் காண்க. ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் முதலிய மற்ற பிருதுகள் வித்வான்களால் அளிக்கப்பட்டன, இதுவும் ஸ்ரீ தேசிக திவ்ய ஸூக்திகளினாலேயே தெரிகின்றது; ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் மேலே குறித்தவிடத்தில் [கவிதார்க்கிக ஸிம்ஹ இதி ப்ரக்யாத குணஸமாக்ய:] என்றும், ஸ்தோத்ர பாஷ்ய ஸமாப்தியில் [அகணி ஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ கவிகதகம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர:] என்றுமுள்ள ஸ்ரீ ஸூக்திகள் காண்க. ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்கிற பிருது ஸ்ரீரங்கநாச்சியாரால் அளிக்கப்பட்டதென்றும் சொல்லுவதுண்டு. ஸமஸ்யாஸஹஸ்ரீ என்கிற பிருது மற்ற பிருது

களைப்போல் ஸுப்ரஸித்தமாக ஸ்வாமிக்கு வழங்குவதில்லையாயினும், அக்காலத்தில் ஸதஸ்ஸுகளில் வித்வான்களால் வழங்கிவரப்பட்டதென்று விளங்குகின்றது. ஒரு ச்லோகத்தின் ஏகதேசத்திற்கு "ஸமஸ்யா" என்று பெயர். ஸமஸ்யா பூரணம் என்பது மஹா கவிகளின் கோஷ்டிகளில் ப்ரஸித்தம். ஒருவர் ஒரு பாதத்தையோ சில பதங்களையோ கவனஞ்செய்து வெளியிட்டால், மற்றொருவர் அப்போதே பூர்ண ச்லோகம்பாடி அதனைப் பூர்த்திசெய்து வெளியிடுதல் ஸமஸ்யா பூரணமெனப்படும். கவிகளுக்கு இதுவொரு விநோதமான போது போக்கு.

தேசிகன் ஸமஸ்யைகள் கொடுப்பதிலும், பிறர் கொடுக்கும் ஸமஸ்யைகளைப் பூரணம் செய்வதிலும் நிகரற்ற வல்லவர் என்பது விளங்க "ஸமஸ்யா ஸஹஸ்ரீ" என்ற விருது தோன்றியதென்பர். அங்ஙனே ஸ்வாமி அருளிச்செய்த ஸமஸ்யைகளோ பூரணங்களோ இப்போது ஒன்றும் கிடைக்காததனால் லுப்தங்களாயினவென்று சொல்லக் கேள்வி.

### *ஸ்வாமி திருக்கிணறு கட்டினது*

ஸ்வாமி ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று பிருது வஹித்து விளங்கிவந்ததில் பொறாமைகொண்ட ஒரு கொத்தன் ஸ்வாமி திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியிருக்கும்போது ஒரு நாள் அருகே வந்து, தேவரீர் எல்லாக் காரியங்களும் செய்ய வல்லமை பெற்றிருந்தாலன்றோ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று விருதூதிப் புறப்படலாம்; நான் கிணறு கட்டுவேன்; அது கட்ட உமக்குத் தெரியாதல்லவோ? அப்படியிருக்க இந்த விருதை நீர் எங்ஙனே வஹிக்கலாம்? என்று ஆக்ஷேபிக்க, ஸ்வாமியும் புன்முறுவல் செய்துகொண்டே அவன் முன்னிலையிலேயே ஒரு கிணறு நிர்மாணஞ் செய்து அவனது செருக்கை யடக்கினர். இந்தக் கிணறு நாளைக்கும் பக்தர்கள் சேவிக்கத்தக்க நிலைமையிலுள்ளது என்று சொல்லி வருகிறார்கள். திருவயிந்திரபுரத்தில் காட்டியும் வருகிறார்கள்.

### *ஸ்வாமி பாம்பாட்டியை வென்றது*

மற்றொருகால் ஒரு பாம்பாட்டி, ஸ்வாமிஸந்நிதானத்தில் வந்து விடைகொண்டு 'நீர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராகில் கொடிய பாம்புகளை ஆணையிட்டுக் கட்டுந்திறனும் உமக்குத் தெரிந்திருக்கவேண்டுமே; அந்த வல்லமையைக் காட்டுவீராகில் நீர் மெய்யே ஸர்வதந்த்ர ஸ்வதந்திரரே' என்று சொல்லிக்கொண்டே தான் ஜீவநார்த்தமாக வைத்திருந்த சில பாம்புகளைப் பெட்டியினின்றும் திறந்து விட, அவையும் சீறிக்கிளம்ப, அப்போது ஸ்வாமி, இனி நாம் வெறுமனிருக்கலாகாதென்று கருதி வைநதேய மந்த்ர ஜபத்துடனே தம்மைச் சுற்றிச் சில கோடுகள் போட, மிகக்கொடிய ஒரு ஸர்ப்பம் மாத்திரம் கோடுகளைக் கடந்து ஸ்வாமியை நெருங்கினவளவிலே, ஸ்வாமி உடனே ஹ்ருதயத்தினால் பக்ஷிராஜனை ஆஹ்வாநம் செய்தருள, அவனும் சடக்கென வந்து தோன்றி அந்த அரவங்களைக் கவ்விக்கொண்டு, அகலவே பாம்பாட்டி தான் பங்கப்பட்டது மல்லாமல் தனது ஜீவநார்த்தமாக வைத்திருந்த பாம்புகளும் தொலைந்ததனால் பரிதாபம் மிக்கு ஸ்வாமி திருவடிகளிலே விழுந்து வேண்டிக்

கொள்ள, ஸ்வாமியும் திருவுள்ள மிரங்கி மீண்டும் அந்தப் பாம்புகள் அவனுக்குக் கிடைக்குமாறு அநுக்கிரஹஞ் செய்தருளினர்.

### ஸ்வாமியின் கவிதா சாதுர்யம்

உலகில் கவனம் செய்வதில் மிகவும் குசலர்களான மஹாகவிகள் பலர் இருந்தாலும் ஸ்வாமியினுடைய கவித்வஸாமர்த்தியம் பரமவிலக்ஷணமாயிருக்கும். 1. ஆசுகவி, 2. மதுரகவி, 3 சித்ரகவி, 4. விஸ்தாரகவி—என நான்கு வகையாக வகுக்கப்பட்டுள்ள கவிதையிலும் ஸ்வாமி நிகரற்றவர். "ஹடாதாக்ருஷ்டாநாம் கதிபயபதாநாம் ரசயிதா" என்கிற கணக்கிலே மிகவும் சிரமப்பட்டுப் பதங்களைக் கூட்டிக் கவிபண்ணுகை யன்றிக்கே சொற்களானவை "என்னைக் கொள் என்னைக்கொள்" என்று அஹமஹமிகயா வந்து நெருங்குண்டு கங்கா ப்ரவாஹம்போலே பெருக்கெடுத்து ப்ரவஹிக்கும்படியான ஆற்றல் அஸாதாரணமாக இங்குக் காணத்தக்கது. ஒரு க்ஷண மாத்திரத்திலே அநேக ச்லோக ராசிகளை அவதரிப்பிக்கும் சக்தியும் அந்த ச்லோகங்களெல்லாம் அர்த்த புஷ்டியோடும் ரஸபுஷ்டியோடும் கூடியிருக்கப் பெறுகையும், பத்மபந்தம், சக்ரபந்தம், முரஜபந்தம் என்றாற்போலே பலவகைப்பட்ட பந்தங்களிலே யமைத்து ச்லோகங்களை அவதரிப்பிக்க ஸங்கல்பித்த மாத்திரத்திலே அவை அழகாக அமையும் அதிசயமும், அவைதாமும் எண்ணிலா திருக்கப் பெற்ற ஆச்சரியமும் நோக்குமிடத்து, கவிதாவதார பூமியாக ஸ்வாமியை அறுதியிடலாம்.

### ஸ்வாமியின் விரக்திஸம்பத்தி

ஸ்வாமியின் பெருமைகளைக் கண்டு பொறாத சிலர் தங்கள் பொறாமைக்குப் போக்குவீடாக, ஸ்வாமி திருமாளிகைக்குள்ளே எழுந்தருளியிருக்கும்போது வெளிவாசற் பட்டையில் பழைய பாதரக்ஷைகளைக் கட்டித் தொங்கவிட்டுவைத்து வேடிக்கை பார்ப்பதற்காக மறைந்து நின்றார்களாம். ஸ்வாமியும் கார்யவசாத் வெளியே எழுந்தருளும்போது அந்தப் பாதரக்ஷைகள் தலையில் இடிக்க உடனே நிமிர்ந்து பார்த்து விஷயமறிந்து, "கர்மாவலம்பகா: கேசித் கேசித் ஜ்ஞாநாவலம்பகா:, வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று அநுஸந்தித்துக்கொண்டே யெழுந்தருள, இந்த அத்யவஸாய விசேஷத்தைக் கண்டு ஸ்வரூபசிக்ஷை பெற்ற பொறாமைக்காரர்கள் சடக்கெனத் திருவடிகளிலே விழுந்து பொறுப்பித்துக்கொண்டு போனார்கள், என்பதாக ஒரு ஐதிஹ்யம் சொல்லி வருகிறார்கள். "கர்மாவலம்பகா:" இத்யாதி ச்லோகத்தை ஸ்வாமி ஸாதித்திருப்பதுண்டு; அதற்குச் சார்பாக இந்த ஐதிஹ்யம் கல்பிதமாயிருக்கக்கூடும் என்று பல மஹான்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். இதைப் பற்றிக் கீழே பேசினோம்.

### ச்ராத்தஸம்ரக்ஷணவிநோதம்

ஸ்வாமியினுடைய திருத்தகப்பனாருக்குத் திருவத்யயனம் ப்ராப்தமாக, வழக்கப்படி மூன்று ஸ்வாமிகளை முன்னமே நிமந்த்ரணம் செய்துவைக்க, அவர்களும் இசைந்திருந்து சில பொறாமையாளர்களின் துர்ப்போதனைக்கு

வசப்பட்டுத் தம்தம் க்ருஹங்களிலேயே போஜனம் செய்துவிட்டு, ஸமயத்தில் சில வ்யாஜோக்திகளைச் சொல்லியனுப்பி ச்ராத்தத்தைக் கெடுக்கப்பார்த்த வளவிலே ஸ்வாமியும் அந்த காலத்திலே வேறொருவரையும் நிமந்த்ரணம் செய்ய முடியாமல் மூசித்திருந்து, பிறகு ஒருவாறு உள்ளம் தேறி ஸ்ரீஹயக்ரீவனையே ஆவாஹனம் செய்தருளி ஹோமம் முதலியவற்றையும் செய்து மூன்று இலைத் தளிகைகளைச் சேர்த்து ப்ரஸாதவ்யஞ்ஜநாதிகளைப் பரிமாறிப் பரிஷேசநாதிகளையும் பண்ணிவைத்துத் திருத்திரை சேர்த்து, திரைக்கு வெளியே தாம் நின்றுகொண்டு, 'யதாஸுகம் ஜுஷத்வம்' என்று ப்ரார்த்தித்து அபிச்ரவணம் ஓதிக்கொண்டிருக்க, ஸ்வாமியின் திருவுள்ளத் தூய்மைக்கு உகந்தருளின ஹயக்ரீவன் தாமே மூன்று இலைகளிலும் எழுந்தருளியிருந்து அமுது செய்யும் ஓசை அடங்கினவுடனே திரையையவிழ்த்து மேற்காரியங்களையும் யதாக்ரமமாக நடத்தி இஷ்டபங்க்தி போஜனத்தில் அமர்ந்தருளினர். அப்போது ச்ராத்தத்தைக் கெடுத்துவிட்டதாக எண்ணி ஆனந்திக்க அவ்விடம் வந்து சேர்ந்து மறைந்து பார்த்துக்கொண்டிருந்த பாதகிகள், ஸ்ரீ ஸ்வாமியின் திருமாளிகை வாசல் திண்ணையில் மஹாதேஜஸ்விகளாக மூன்று ஸ்வாமிகள் அமுது செய்த திருக்கோலத்துடனே ஸேவைஸாதிக்கக் கண்டு மிகவும் அதிசயித்து ஸ்வாமிதிருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் செய்துகொண்டு சென்றுர்கள். [இவ் வைதிஹ்யத்தைப்பற்றிக் கீழே விரிவாக எழுதியிருக்கிறோம்.]

## ஸ்வாமியினுடைய விரக்தியின் வீறு

ஸ்வாமி உஞ்சவ்ருத்தியினாலேயே (கூரத்தாழ்வான் போல்) தேஹயாத்திரையை நடத்திக்கொண்டு வந்தாராதலால் அதை இழிவாக நினைத்த சிஷ்யர்கள் அந்த உஞ்சவ்ருத்தியை நிவர்த்திப்பிக்க வேணுமென்றெண்ணி ஒருநாள் தண்டுலத்துடன் ஸுவர்ண த்ரவ்யங்களையும் சேர்த்து ஸமர்ப்பித்தார்கள். திருமாளிகைக்கு எழுந்தருளின பின் தேவிகள் அவற்றைக் காண்பிக்க ஸ்வாமிகடாக்ஷித்து அதைக் காஷ்டலோஷ்ட நிர்விசேஷமாக எண்ணி வீதியிலே இறைத்துவிட்டார் என்று சொல்லிவருகிறுர்கள்.

## ஹயக்ரீவ லீலா விசேஷம்

ஸ்வாமி ஒருகால் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு எழுந்தருளா நிற்கையில் வழியிடையே ஒருநாள் பகவதாராதனத்திற்கு ஸௌகரியமில்லாமற் போக, அன்று வெறும் தீர்த்தத்தையே பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணித் தாமும் ஸ்வீகரித்து மேலே வழி நடந்து இரவில் ஒரு த்ரைவர்ணிகனுடைய மனையருகில் விச்ரமித்திருக்க, அப்போது ஸ்ரீஹயக்ரீவன் நிஜரூபத்துடன் வெளியேறி அந்த த்ரைவர்ணிகனுடைய கொல்லையில் தானியங்களை யதேஷ்டமாக புஜித்துக்கொண்டிருக்க, அதனையறிந்து சென்று அவன் தன்னாலான மட்டும் துரத்திப்பார்த்தும் முடியாமல் இது ஸ்வாமியினுடைய குதிரையாயிருக்குமென்று ஊஹித்து உடனே ஸ்வாமியைத் தட்டி யெழுப்பிக் குதிரையைப் பிடித்துக் கட்டவேணுமென்று வேண்ட, ஸ்வாமியும்

திடுக்கிட்டு இது வெள்ளைப்பரிமுகருடைய விளையாடல் போலுமென்று அத்யவ ஸித்து, பாலமுதவரவழைத்து நிவேதனம் செய்தருளினவாறே குதிரைநம்பிரான் அந்தர்ஹிதரானார். என்று சொல்லி வருகிறார்கள். பரமவிரக்தாக்ரேஸரரான தேசிகன் குதிரையில் எழுந்தருளினதாக நினைப்பதற்கு ப்ரஸக்தியே யில்லாமை யினால் இது அதிவாதமான சரித்திரமாயிருக்கலாம். உண்மையானாலும் குறை யில்லை.

## ஏகாதசியைதிஹ்யவிசேஷம்

ஸ்வாமி ஏகாதசி நாளில் ஸ்ரீ ரங்கநாதனை மங்களாசாஸனம் செய்து நிற்கையில் பொறுமைக்காரர்களின் ப்ரேரணையால் அர்ச்சகர் ஸ்வாமி திருக் கையில் பொங்கல் ப்ரஸாதத்தைக் கொணர்ந்து கொடுக்க, ஸ்வாமியும் அதைத் தமது திருக்கைகளில் வாங்கி வைத்துக்கொண்டு பெரிய பெருமாளை நோக்கி 'ஸ்வாமின்! அடியேனை இங்ஙனே சோதிக்கத் திருவுள்ளம் பற்றலாமோ? உபவாஸ தினமான இன்று இவ்வன்னத்தைப் பாவியேன் என் செய்வேன்? இவைப்புறத்து நியமனம் பெரிதோ? இப்போதைய நியமனம் பெரிதோ? நியமித்தருளவேணும்' என்று விண்ணப்பம் செய்ய; ஸ்ரீ ரங்கநாதன் மற்றோர் அர்ச்சகமுகேந 'பிள்ளாய்! இது நமது ஆஜ்ஞையன்று; ஏகாதசியன்று ஒரு நாளும் அன்னம் ஸ்வீகரிக்கத் தக்கதன்றுகாண்' என்று நியமிக்க, ஸ்வாமியின் ப்ரபாவாதிசயத்தைக் கண்டு அர்ச்சகாதிகள் திருவடி வணங்கி அபசாரக்ஷாமணம் செய்து கொண்டார்கள் என்று ஒரு கதை சொல்லி வருகிறார்கள். இது சுவையற்ற கதையே.

## ஸ்வாமிதிறத்தில் அஸஹ்யாபசாரம்

ஸ்வாமி நம்பெருமாள் ஸந்நிதியில் உபயவேதாந்த ப்ரவசனம் செய்து கொண்டு எழுந்தருளியிருந்த காலத்தில் ஒருநாள் திருமாளிகை வாசல் திண்ணை யில் வீற்றிருந்து மிகப் பெரிய சாஸ்த்ரவிசாரமொன்றில் ஆழ்ந்திருக்கையில் 'கந் தாடை லக்ஷ்மணாசார்யர்' என்கிற ஆசார்ய பீடஸ்தரொருவர் தம்முடைய சிஷ் யர்களுடன் அந்த வீதி வழியே சென்று கொண்டிருந்தாராம்; அதை தேசிகன் கவனியாமல் எழுந்தருளியிருந்ததற்காக அந்த சிஷ்யர்களிலொருவர் மிகச் சினந்து தேசிகனிடம் ஓடிவந்து 'நமது மஹாசார்யர் எழுந்தருளா நிற்க நீர் இங்ஙனே அவமரியாதைகாட்டி உட்கார்ந்திருப்பது என்ன பேதைமை" என்று ஆரவாரித்து ஸ்வாமியின் திருவடிகளைப் பிடித்து இழுத்து விட்டுச் சென்றாராம். ஸ்வாமியும் திடுக்கிட்டெழுந்து இப்படி வீணாக பாகவதாபசாரம் நேர்ந்து விட்டதே! என்று சாலவும் திருவுள்ள முடைகுலைப்பட்டு ஏகாந்த வாஸத்திலே திருவுள்ளம் சென்று கோயிலைவிட்டுப் புறப்பட்டு, ஸத்ய மங்கலத்திற்கெழுந்தருளி விட்டாராம். "சிஷ்யபாபம் குரோரபி" என்பது சாஸ்த்ர மானமாயாலே அந்த சிஷ் யன் செய்த பாபம் அவனது குருவான லக்ஷ்மணாசார்யர் செய்ததாகத் தீர்ந்து அவருடைய மேனியில் ஒரு வைவர்ணியம் உண்டாயிற்றாம். பல சிகித்ஸைகள் செய்தும் "பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால்" என்றாப்போலே அந்த வியாதி மேன்மேலும் அதிகரித்து வருகிறபடியைக் கண்ட அவர் 'இது தேசிகன் திருவடிகளில் பட்ட அபராதத்தின் பலனே' என்று ஆப்த வசனங் களாலே அறிந்திட்டு ஸபரிவாரராய் தேசிகனிடத்தேறச் சென்று போதுமை

வேண்டிச் சில காலம் ஸ்வாமி திருவடிவாரத்திலேயே வஸித்திருந்து நித்யம் ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்துப் போந்தாராம். அதன் பயனாக அவர் நீராத நோய் தீரப்பெற்றதுமன்றி ஒரு மகப்பேறும் உண்டாகப் பெற்றாராம். தீர்த்த மஹிமையினாலேயே பிறந்த அந்த மகனுக்கு தீர்த்தப் பிள்ளையென்றே பெயரிட்டாராம். அந்தப் பிள்ளை தேசிகன் விஷயமாக ஒரு நூற்றந்தாதி பணித்திருப்பதாகவும் சொல்லுகிறார்கள். பிறகு அந்த லக்ஷ்மணாசார்யருடைய ப்ரார்த்தனைக் கிணங்கி தேசிகன் திருவரங்கம் பெரியகோயிலேற மீண்டெழுந்தருளினாராம். இதைப்பற்றியும் கீழே எழுதியிருக்கிறோம். நிராதாரமான கதைகள் இவை.

## அபீதிஸ்தவமவதரித்த விசேஷம்

இங்ஙனம் கோயிலில் வாழ்ந்தருளும் காலத்தில் ஒரு நாள் துலுக்கர்கள் ஸஹஸா படையெடுத்து வருகையில் அப்போது கோயிலில் இருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் ஸதுபாயமாகப் பெருமாளுக்குச் சேமக்காப்புச் செய்து பல திசைகளிலும் பாறியோட நேர்ந்தது. அப்போது ஸ்வாமி தேசிகனும் மேற்கே எழுந்தருளும்படியாயிற்று. அப்போது கோயிலில் ஸ்ரீ ச்ருதப்ரகாசிகா பட்டர் துருஷ்கயவனர்களின் நலிவு பொறுக்கமாட்டாமல் உயிர் துறக்குமவராக, ஏற்கெனவே தாமருளிச் செய்திருந்த ச்ருதப்ரகாசிகா ஸ்ரீகோசத்தை ஸ்வாமி திருக்கையிலே கொடுத்து "இதை ஸத்பாத்ர விநியோகம் செய்து போரீர்" என்று நியமித்து, தம்முடைய இரண்டு குமாரர்களையும் ஒப்படைத்து திருநாட்டுக்கெழுந்தருளினார். அப்போது ஸத்யமங்கலம் முதலான மேல் நாட்டு நகரங்களிலே வாழ்ந்து திருநாராயணபுரம் சென்று சேர்ந்த தேசிகன் திருவரங்கம் பெரியகோயில் நிஷ்கண்டகமாக வேணுமென்றும், பழையபடியே தாம் கோயிலிலே பரஸ்பர ஹிதைஷிகளான ஸதாசார்யர்களின் திருவடி நிழலிலே வாழப்பெற வேணுமென்றும் கொண்ட மநோரதங்களைப் பெய்து அபீதிஸ்தவமென்னும் அரிய பெரிய ஸ்தோத்ரமொன்றையருளிச்செய்து சிஷ்யர்களுடனே நித்யாநுஸந்தானம் செய்து வந்தார்.

## கோயிலிற் சேமவாழ்வு

அபீதிஸ்தவாநுஸந்தானத்தின் பயனாக அடியார்களும் அரங்கநகரும் அவத்யம் நீங்கி அமரிக்கை யடைந்ததாகக் கேள்வியுற்ற ஸ்வாமி தாமும் போரவு முகந்தருளி நம்பெருமான் ஸந்நிதிக்கே மீண்டும் வந்து சேர்ந்தார். அப்போது கோப்பணார்யன் என்னும் பரமபாகவதோத்தமனான செஞ்சி சிற்றரசனொருவன் துருஷ்கர்களை யெல்லாம் வலியொழித்து ஆபத்துக்களை அறவேயொழித்து நம்பெருமாளையும் யதாவத்தாகத் திருப்ரதிஷ்டை செய்வித்து நித்யோத்ஸவாதிகளை யெல்லாம் நிலைபெறுத்தியிருந்த சிறப்புக்களைக் கடாக்ஷித்துத் திருவுள்ளம் மகிழ்ந்திருந்தார். "வேள்வியும் விழவும் வீதியிலென்று மறாத வூர்களிலே தலையான அந்தத் தென்னரங்கத்திலே மார்கழித் திருநாளான திருவத்யயந மஹோத்ஸவம் ப்ராப்தமான ஸமயத்திலே புறச்சமயிகள் திரண்டுவந்து "தமிழ்ப் பாஷையிலமைந்த பிரபந்தங்களை இங்கே ஓதுவதற்கும் அந்தப் பிரபந்தங்களைப் [illegible] ஆழ்வார்களை இங்கே போற்றுவ

தற்கும் பிரமாணம் காட்டினாலல்லது இத்திருநாள் செய்யவொட்டோம்" என்று தடைசெய்து நிற்க, அப்போது ஸ்வாமி தேசிகன் *தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் ப்ரமாணோபந்யாஸ பூர்வகமாக அவர்களுடைய துர்வாதங்களை நிரஸித்தருளி ஒரு விப்லவமும் குன்றாமே அவ்வுத்ஸவம் முன்னிலும் சிறந்த நடை பெறுமாறு சேமம் செய்தருளினாரென்று எழுதியுள்ளார்கள். இதற்கு ஆதாரமில்லை. ஆனாலும் இதை நாம் மறுக்கவேண்டா. ப்ராப்தகைங்கர்யமேயிது.

## த்வைதாத்வைத மாத்யஸ்த்யம்

இங்ஙனம் ஸ்வாமி கோயிலில் சீரும் சிறப்பும் பொலிய வாழ்ந்தருளா நிற்குங்காலத்திலே, அத்வைத மத ப்ரவர்த்தகரா யிருந்த வித்யாரண்யருக்கும் த்வைத மத நிர்வாஹகராயிருந்த அக்ஷோப்ய முனிவர்க்கும் வேதாந்த வாக்யார்த்தம் நடந்து வருகையில் அதில் ஜயாபஜயம் நிஷ்கர்ஷிக்கத் தகுதியான மத்யஸ்தர் நேர்படாமல் அவர்கள் தங்களுடைய வாதவிவாதங்களை யெழுதி ஸ்வாமி தேசிகனிடம் அனுப்ப, ஸ்வாமி அவற்றைப் பராமர்சித்து அக்ஷோப்ய முநிபக்ஷத்தில் வெற்றியைத் திருவுள்ளம் பற்றி *அஸிநா தத்த்வ மஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முநிரச்சிநத்* என்கிற ச்லேஷஸம்வலிதமான காரிகாரத்னத்தை அநுக்ரஹித்து அனுப்பியருளினார்.

## ஸங்கல்ப ஸூர்யோதயமவதரித்தல்.

க்ருஷ்ணமிச்ரன் என்கிற ஒரு அத்வைத வித்வான் இயற்றியிருந்த ப்ரபோத சந்த்ரோதய மென்கிறவொரு நாடகக்ரந்தத்தை அவனுடைய அநுபந்திகள் ஸ்ரீரங்கத்திலே கொண்டுவந்து ப்ரசாரம் செய்து கொக்கரித்துக் கொண்டிருந்தவளவில் அதை ஸ்வாமி தேசிகன் திருச்செவிசாத்தி 'இதற்கெதிராக ஸங்கல்ப ஸூர்யோதய நாடகம் காணலாகாதோ?' என்று புன்முறுவலோடே பணித்தாராம்; அப்படியும் ஒரு நாடக முண்டோ?' என்று ப்ரஸ்தாவமாக, "நாளையுதயத்திலே காட்டுகிறேன் காணீர்" என்று ஸாதித்து உடனே அந்த திவ்ய நாடகத்தைத் திருவாய்மலர்ந்தருளித் தோன்றுவித்தருளினார். அவ்வதிசயத்தைக் கண்டு அனைவரும் அகங்குழைந்தார்கள்.

## பாதுகாஸஹஸ்ரப்ராதுர்ப்பாவம்.

ஸ்வாமி பணித்த ஸ்தோத்ரங்களுக்குள் அற்புதமானது பாதுகாஸஹஸ்ரம். இது, அழகிய மணவாளனுடைய திருவடிநிலைகளை ஆயிரம் ச்லோகங்களால் ஆச்சரியமாக வருணிக்கும் ஸ்தோத்ரம். இதனை யருளிச் செய்ததற்குக் காரணம் இன்னதென்பதை 'ஆசாரிய சம்பூ' கூறியுள்ளது; ஸ்வாமியின் பெருமையைப் பொறாதவனும், 'நாமே ஆசுகவி' என்று செருக்குற்றவனுமான ஒரு இதர ஸமயக் கவியோடு ஸ்பர்த்தை யுண்டாயிற்று. அதனால் ஸ்வாமி இந்த க்ரந்தம் அருளிச் செய்யலாயிற்றென்கிறார் அந்த சம்பூகாரர். வைபவப்ரகாசிகை என்கிற க்ரந்தம் கல்பிதமேயாயினும் அதில் (ச்லோ. 114.) "ஸுப்ராதத்தேஸ் ஸம்ஸதி ஸூரிவர்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிராயாம்" என்கிற ச்லோகத்தினால், திருவோலக்கத்தில் சில மஹான்கள் ஸ்வாமியைப் ப்ரார்த்திக்க அதனால் இந்த ஸ்தோத்ர மருளிச் செய்ததாகச் சொல்லிற்று.

## ஸ்வாமி சில்பியை வென்ற சிறப்பு.

ஒருநாள் சில பொறாமையாளர்களால் தூண்டப்பட்ட சில்பியொருவன் ஸ்வாமியின் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர பிருதை ஆக்ஷேபித்து சில்பத்திலும் ஸ்வாமியினுடைய அப்ரதிம சாதுர்யத்தை உலகமறிய ப்ரகாசிப்பிக்க வேண்டிக் கொக்கரித்து நிற்க, அப்போது ஸ்வாமியும் தம்முடைய சில்பசாஸ்த்ர பாண்டித்யத்தை நன்கு புலப்படுத்தித் தம்மைப்போல ஒரு விக்ரஹம் ஏறி யருளப்பண்ணிக்காட்ட, ஸுபரீக்ஷிதமான அதன் பொருத்தத்தைக் கண்டு வியந்த அந்த சில்பி தோற்றே னென்று திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் வேண்டிச் சென்றான். அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸ்வாமி தாம் ஆரத்தழுவியருளித் திருக்குமாரர் பாடே கொடுத்தருளினரென்று சொல்லிப் போருவர்கள்.

## திருவவதாரஸமாப்தி

இங்ஙனேயான அதிமாநுஷ திவ்யப்ரபாவங்களைப் பண்ணியுரைக்குங்கால் பாரதமாம். கடல்வளைய திசை யெட்டினுள்ளும் மிடைதந்த கலியிருளை உபதேசங்களாலும் அனுஷ்டானங்களாலும் பல பல திவ்யக்ரந்த ரசனைகளாலும் போக்கியருளி 'பொலிகபொலிகபொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை" என்ற ஆழ்வாரருளிச் செயலை அர்த்தவத் தாக்கி யருளினர். எப்படிப்பட்ட அதிசயிதப்ரபாவர்களையும் எம்பெருமான் ஒருகால் தன்னடிச் சோதிக்கு வரவழைத்துக் கொள்வதென்பது ஒரு நியமமாகக் காணுதலால் ஸ்வாமியையும்* சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியேற வரவழைத்துக் கொண்டு ஒழிவில் காலமெல்லாம் வழுவிலா வடிமைகொண்டருளத் திருவுள்ளம்பற்றின வளவிலே, ஸ்வாமியும் ஸௌம்யஸம்வத்ஸரத்துக் கார்த்திகைப் பௌர்ணமி நன்னாளில் இருள் தருமாஞாலத்தை விட்டகன்று தெளிவிசும்பு திருநாடேற வெழுந்தருளினர். ... ... •

வேதாந்த தேசிக வைபவத்தில் சரித்திரபரமான முதற்பகுதி முற்றிற்று.

---

# வேதாந்த தேசிக வைபவம் - அநுபந்தம்

## (2. ஆராய்ச்சிப்பகுதி)

### —பிறரெழுதியவற்றைப் பராமர்சித்தல்—

வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்புவில் பேசப்பட்டுள்ள தேசிக சரித்திரத்தை [கீழே 5, 6 பக்கங்களில்] ஒன்று விடாமல் நாம் எடுத்துக்காட்டியுள்ளோம். அந்த நூல் ஒன்றே பிராமாணிகமும் புராதனமுமாகையாலே அதில் சொல்லப்படாத சரித்திரங்களை யாரும் எழுதத்தகாது. சில காரண விசேஷங்களினால் தேசிகனோடு உறவைப் புதிதாக ஏற்பட்டுக் கொண்டவர்கள் அந்த ஆசார்ய சம்பூக்ரந்தத்தை ஸர்வாத்மநா அலக்ஷியஞ்செய்து, அதில் பேசப்பட்ட சரித்திரங்களுக்கு முரணானவற்றையும், அதில் அடியோடு ப்ரஸ்தாவிக்கப்படாதவற்றையும் ஸ்வேச்சையாகச் சேர்த்து தேசிக சரித்திரமென்றும் தேசிக வைபவமென்றும் சில கற்பனைச் சுவடிகளை வெளியிட்டுள்ளார்கள். கீழே பலகாலும் ப்ரஸ்தாவிக்

கப்பட்ட அட்வகேட்டானவர் அன்னவர்களில் ஒருவர், அல்லது தலைவர். அவர் தேசிகனவதரிப்பதற்குக் காரணமெழுதப் புகுந்து "இதர ஆசாரியர்கள் பிராட்டி விஷயமாக அபார்த்தங்களையெழுதி அவளுடைய பெருமைகளைக் குலைத்துவிட்டார்கள்" என்றும் "தேசிகன் அவதரித்து அந்த அபார்த்தங்களை யெல்லாம் களைந்து பிராட்டியின் பெருமைகளை ஆச்சரியமாக ஸ்தாபித்து விட்டார்" என்றும் எழுதிவைத்துள்ளார். எழுதிவைத்ததுமன்றி ஸ்வகோஷ்டிகளில் பெரும்பான்மையாகப் பேசும் பேச்சும் இதுவேயாம். உண்மையில் பிராட்டியின் பெருமை எத்தகைத்து? அதை தேசிகன் எவ்வண்ணமாக நிஷ்கர்ஷித்துள்ளார்? இதில் இதர ஆசாரியர்களின் திருவுள்ளத்திற்கும் தேசிகனுடைய திருவுள்ளத்திற்கும் எவ்வகையான வாசியுள்ளது? என்றிவை முதலான விஷயங்களைச் சிறிதும் அறியவில்லாமலும் ஆராயவில்லாமலும் தாம் மருண்டதோடு நில்லாமல் பிறரையும் மருளச் செய்திருப்பது மிகமிக வருந்தத்தக்கது. தேசிகனுடைய கொள்கைகளைத் தெரிந்துகொள்ள சிரமப்பட வேண்டியதுண்டோ? அவருடைய திவ்யஸூக்திகள் லோபித்துவிடவில்லையே. பிராட்டி விஷயத்தில் நால்வரம்பை மீறி தேசிகன் ஓரெழுத்து மெழுதிற்றில்லையே. அவர்தாம் ஸுஸ்பஷ்டமாக அருளிச் செய்திருப்பவை இங்கு ஸாரமாக நிரூபிக்கப் படுகின்றன.

ஜகத்காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் விபுத்வம் ஆகிய இவற்றைப் பிராட்டியிடத்தில் தனிப்பட நிரூபிக்கும் விஷயத்தில் தேசிகன் சிறிதும் இறங்கவில்லை, இதை க்ரமேண எளிதாக நெஞ்சில் பதியவைக்கிறோம். யாதவாப்யுதய மென்னும் மஹாகாவ்யம் ஸ்வாமி தேசிகன்பணித்தது; இதில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமானது. அதில் 1, 2. ச்லோகங்களினால் ஸாக்ஷாத்ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ருக்மிணிப்பிராட்டியாகத் திருவவதரித்ததாய்ச் சொல்லப்பட்டது. உடனே மூன்றுவது சுலோகம் வருமாறு—

> "சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்கார லீலோபமவி ச்வக்ருத்யம்,
> அதீயதே தந்மிதுநம் ஸ்வபாவாத் அந்யோந்ய ஜீவாது மநந்ய போக்யம்"

என்பதாகவுள்ளது. இதற்கு மேலுள்ள சுலோகங்களெல்லாம் ருக்மிணிப்பிராட்டியை மாத்திரமே நோக்கியவை. முதலிரண்டு ச்லோகங்களும் அப்படிப்பட்டவை. இடையில் மூன்றுவதான ச்லோக மொன்று மாத்திரம் மிதுநம் என்கிற நிர்தேசத்தையுட்கொண்டு தோன்றியுள்ளது. இந்தச்லோகத்தில், *ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்* என்பதற்கு வியாக்யான மென்ன வென்றால், "ச்ருங்கார லீலாவத் அநாயாஸ ஸாத்ய-விநோத ரூப-ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிக்ருத்யம்" என்பதேயாம். இப்படிப்பட்ட க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியாக இட்டுப் பேசுவதற்குத் திருவுள்ள மில்லாமையினாலேயே தேசிகன் மிதுநம் என்கிற பதத்தை ப்ரயோகித்து இடையிலே இந்த வொரு சுலோகத்தை விலக்ஷணமாக அமைத்தார். முன்னும் பின்னும் பிராட்டியை மாத்திரமே குறித்துச்லோகங்களை யருளிச்செய்து போருகிறவர் இவ்வொருச்லோகத்தில் மிதுநம் என்று இருவரையும் சேர்த்தருளிச்செய்ததை உற்று நோக்கினால் ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிகளில் பிராட்டிக்குத் தனிப்பட அந்வய மில்லையென்று தேசிகன் நிச்சயித்திருப்பது திடமாகும்.

ஸ்ரீஸ்துதியிலும், *யத்ஸங்கல்பாத் பவதி கமலே யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்மஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம்; தத் கல்யாணம் கிமபி யமிநாம் ஏகலக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்* என்கிற இவ்வொரு சுலோகமே போதும் பிராட்டி விஷயத்தில் தேசிகன் திருவுள்ளத்தை உள்ளபடி

யுணர. பிராட்டியை ஸ்துதிக்க இழிந்தவர் பிராட்டியினிடத்துள்ளதையன்றோ பேச வேண்டும். *ஜங்கமா ஜங்கமாநாம் ஜந்ம ஸ்தேமப்ரலயரசநாம் இந்திரே! த்வம் கரோஷி* என்று ச்லோக மியற்ற அருமையில்லையே. இப்படிச் சொன்னலன்றோ பிராட்டியின் ஸ்துதியாகும். உண்மையில் இவளிடத்தில்லாததை இருப்பதாக வைத்து எவ்வனே கவி பண்ணுவர்? கூரத்தாழ்வான் முதலான பூர்வாசார்யர்கள் *ஆபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந்ஹரி:, யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே* இத்யாதியாக அருளிச் செய்ததைப் பின்பற்றியேதான் தேசிகனுமருளிச் செய்கிருரென்பது ஸ்பஷ்டம்.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ணப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் "ஈச்வரனுக்கு ச்சத்ரசாமராதிகளைப்போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ-மோக்ஷப்ரதத்வ-ஸர்வாதாரத்வ-ஸர்வநியந்த்ருத்வ-ஸர்வ சேஷித்வ-ஸர்வசரீரித்வ-ஸர்வசப்தவாச்யத்வ ஸர்வவேதவேத்யத்வ - ஸர்வலோகசரண்யத்வ-ஸர்வபலப்ரதத்வ-லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிபதங்கள்" என்றருளிச் செய்யப்பட்டது. இந்த மஹாவாக்யத்தில் ஜகத்காரணத்வத்தை முந்துறச் சொல்லி முடிவில் லக்ஷ்மீஸஹாயத்வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீ ஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே ஜகத்காரணத்வமும் அவளுக்கு அஸம்பாவித மென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்துமென்றும் காட்டப்பட்டதாயிற்று. இப்படி யருளிச் செய்ததும் ஸ்ரீ பாஷ்யத்தில் *விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்றவிடத்துச்ருதப்ரகாசிகையில் "ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞ: ச்சத்ரசாமரவத் ப்ரஹ்மண: அஸாதாரண சிஹ்நம்." என்றருளிச் செய்திருப்பதைப் பின்பற்றியதே. முநிவாஹந போகத்தில் ஆதி யென்றவிடத்தும் இப்படியே தானுள்ளது. ந்யாயஸித்தாஞ்ஜந ஜீவபரிச்சேதத்திலுமிப்படியேதான். இவ்விஷயத்தில் மிகத்தெளிந்த ஞானமுடையவர் தேசிகன்.

சில்லரை ரஹஸ்யங்களென்றும் சில ரஹஸ்யங்கள் தேசிகன் ஸாதித்திருக்கிருர். அவற்றை ஸேவித்தால் இன்னமும் நல்ல தெளிவு உண்டாகும். ரஹஸ்யரத்நாவளி யென்று ஒரு சிறு ரஹஸ்யம். அதில்

"ஸ்ரீமானன நாராயணனெருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்.....
ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இந்நிலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அந்நிலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்"

என்றருளிச்செய்து, இதை ரஹஸ்யரத்நாவளீஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினர் உண்மையில் விவரணவபேக்ஷையே யில்லாத வாக்ய மன்றோவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாகவருளிச் செய்த விடங்கள் ஒன்றிரண்டல்ல: பலபல விடங்களுண்டு, சதுச்ச்லோகியில் மூன்ருவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வ ஸம்மதம்" என்றருளிச் செய்ததொன்றுபோதுமே "எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாகமாத்திரம் பிராட்டி இராநின்ருள்" என்பது இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்தியின் கருத்து. அதற்கு மேலுள்ள ஸ்ரீ ஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்பதையே நிலைநாட்டுவன.

த்வயத்தில் பூர்வ கண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா விசேஷணத்வமா வென்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக் கொண்டு உபலக்ஷணத்துவமென்று சிலர் சொல்லுவதாகவைத்து, அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று

ஸ்தாபிக்கப்படுகிறது ரஹஸ்யத்ரயஸாரத்தில், இது நம்முடைய பூர்வாசார்யர் களின் திருவுள்ளத்தைக் கண்டிப்பதென்று நவீனர்கள் மருண்டிருப்ப துண்டு. இது மிகத் தவறு. இங்கு பிராட்டிக்கு விசேஷணத்வமில்லை யென்று ஒரு ஆசார்யரும் உரைத்ததில்லை; முமுக்ஷுப்படியில் த்வயப் பிரகரணத் தில் "இப்போதிவனைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்யானத்திலே மணவாள மாமுனிகள்—"(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கு முபாயத்வத் தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச் செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே யருளிச்செய்திருப்பது காண்க. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்துவம் கொண்டாலும் வாசி சிறிது மில்லை யென்பதை சாஸ்த்ரஜ்ஞர்கள் உணர்வார்கள் பிராட்டிக்குப் புருஷ காரத்வ முண்டு என்று இசைந்தான பின்பு அவளுக்கு உபாயத்வமுமுண்டு என்று வாய் திறக்க வழியே கிடையாது. உபாயத்வமாவது—தானே கொடுக்க சக்தி யுடைத்தாகை. அஃதிருக்குமாகில் புருஷகாரக்ருத்யத்தில் நின்று துவளவேண் டியப்ரஸக்தியே கிடையாதாகையால் நவீனர்களின் உத்வேலப்ரஸங்கமெல்லாம் உதறித் தள்ளப்பட்டன.

### அட்வகேட்டின் துர்வாதங்களைக் கண்டிக்கும் முக்கியமான சில ஆராய்ச்சிகள்

தேசிகனுடைய காலத்திலாவது, அவர்க்குப்பின் நூறு இருநூறு வருஷங் களுக்கு உட்பட்ட காலத்திலாவது ஆசாரியார்களுக்குள் வைஷம்யமோ ஸம்ப்ரதாய வேற்றுமையோ ஏற்பட்டிருந்தது கிடையாது. சில ஆசாரியர் களுக்குச் சில விஷயங்களில் அபிப்ராய பேதம் என்பது மாத்திரமுண்டு. ஸாமா நஸம்ப்ரதாயஸ்தர்களுக்குள்ளும் உபாகர்மவிசாரம், ஜயந்தீ விசாரம், க்ருத்திகாதீப விசாரம் போன்ற சில விஷயங்களில் அபிப்ராய அநுஷ்டாந பேதங்களிருந்து வருவதை இக்காலத்திலும் எங்கும் கண்டு வருகிறோம். எம்பெருமானார் எழுந் தருளியிருந்தகாலத்திலேயே அவர் திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்தவர் களுக்குள்ளேயே சில அபிப்ராய பேதங்கள் தோன்றியதாகவும் ஆராய்ச்சியில் தெரிய வருகிறது. இதை தேசிகனும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "இத்தமர்த்தா விசேஷேபி போதநாபேத மாத்ரத:, ப்ராசாம்விவாதஸ் ஸம்வ்ருத்தோ பாஷ்யகாரை ரவாரித:" என்ற காரிகையினால் காட்டியுள்ளார்.

ஸோமாசியாண்டானென்பவர் எம்பெருமானார் திருவடியைப் பணிந்தவரா யிருக்கச் செய்தேயும் ஆழ்வான் ஆண்டான் பிள்ளான் கிடாம்பியாச்சான் முத லான ஆசாரியர்களோடு ஸர்வாத்மநா ஸமகண்டராயிராமல் சில அபிப்ராய பேதங் களைக் கொண்டிருந்தாரென்பது ஸ்பஷ்டமாகக் காண்கிறது. சாரீரகமீமாம் ஸையில் சதுஸ்ஸூத்ரீ சாஸ்த்ராரம்பஸமர்த்தன மன்று, முதல் ஸூத்ரம்மாத்திர மேயாம்: ப்ரபத்தி ஸர்வாதிகாரமன்று, பக்தியோகம்போலே இதுவும் அதிக் ருதாதிகாரமே—என்றிப்படிப்பட்ட அபிப்ராய பேதங்கள் எம்பெருமானார் காலத் திலேயே நம் தர்சனத்தில் முளைத்து வளர்ந்து வந்திருக்கின்றனவன்றோ. இந்த ரீதியில் தேசிகனுக்கும் சில அபிப்ராய பேதங்கள் இருந்தனவென்று கொள்ளலாம். அதனால் ஸம்ப்ரதாய பேதமென்று வாய்திறக்க அவகாசமே கிடையாது. அப்படி தேசிகன் கொண்டிருந்த சிற்சில அபிப்ராய பேதங்களும் கடைசிவரையில் நிலைத் திருந்தனவென்று சொல்வதற்குமில்லை. நிலைத்தேயிருந்தனவென்று கொண்டா லும் குறையொன்றுமில்லை. நம்பிள்ளை பரம்பரையிலன்வயித்திருந்த வாதி

கேஸரி அழகிய மணவாளச்சீயர்க்கும் சில அபிப்ராய பேதங்களிருந்தன வென்பது அபலபிக்க முடியாமலிருக்கிறதன்றோ. அதைக் கொண்டு ஸம்ப்ரதாயபேதம் சொல்லுவாரில்லையே.

இக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் இருபிளவு ஏற்பட்டு ஸம்ப்ரதாய பேதம் கோஷ்டிபேதம் புண்ட்ரபேதம் முதலான பல பேதங்கள் காணா நிற்பது போல் தேசிகன் காலத்தில் ஒரு பேதமுமிருந்ததில்லை. இருந்ததென்றே சிலர் வாதித்தாலும் அதை மறுப்போமல்லோம். அந்த பேதங்களில் தேசிகன் கலந்து கொண்டவரல்லர். எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரைகளில் அப்போது விளங்கிவந்த ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களோடும் ஆசார்யர்களோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறினவரேயொழிய கைவல்யாநுபவம் போலே வேற்றுமைப்பட்டிருந்தாரல்லர். வேறொரு கோஷ்டியில் சேர்ந்தாரென்னில் இவர் ஏகாகியாய்த் தனிமைப்பட்டிருந்தாரென்ன வேணுமேயொழிய, வேறொரு கோஷ்டியென்பதற்கு வேறு நபர் ஒருவரும் கிடையாதென்பது திண்ணம். திவ்ய ப்ரபந்தங்களை நன்கு கற்றுணர்ந்து மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களோடு ஒரு நீராக கோஷ்டியில் கலந்து ஸேவிப்பது முதலானவற்றில் ஒத்துழைத்திருந்தாரேயல்லது பிற்கதிர்ப்பட்டிருந்தாரல்லர். அக்காலத்தில் மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவரும் எந்த ஸந்நிவேசமாகத் திருமண்காப்பு அணிந்து கொண்டிருந்தார்களோ அந்த ஸந்நிவேசமல்லது வேறொரு ஸந்நிவேசத்தை நெஞ்சாலும் நினைத்தவரல்லர். இவ்விஷயங்களை நாம் நீர விமர்சித்து அப்ரகம்ப்யமாகத் தெரிவிக்கிறோமாதலால் இதில் விவாதப்படுவது விபலமேயாகும்.

சிலர் சொல்வது யாதெனில்; தேசிகனிடத்தில் திருக்குமாரரும் ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமியுந் தவிர வேறொருவரும் ஆச்ரயித்ததாகத் தெரியாமையால் மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் அஸூயாநிகளாலே தேசிகனை யொதுக்கி வைத்து அணுகாமலேயிருந்து தூஷித்துக்கொண்டுமிருந்தார்களென்று தெரிகிறது: "ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்யராவணாநுஸாரிணாம்" இத்யாதி ச்லோகங்களினாலும் இது ஸ்பஷ்டமாகிறது—என்று. இது ஸாத்விகர்கள் செவியேற்கத் தக்கதேயன்று. ஸங்கல்பஸூர்யோதயத்தில் "த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரகபாஷ்ய:" என்று முப்பது தடவை தாம் ஸ்ரீபாஷ்ய ப்ரவசனம் செய்ததாக அருளிச் செய்திருக்கிறார். திருக்குமாரரும் மற்றொருவருமான இருவர்க்கேயா முப்பதுவிசை ப்ரவசனம் செய்திருப்பர்; அக்காலத்தில் ஜிஜ்ஞாஸுக்களாயிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் தேசிகன் திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்வரூபக்ரந்தங்கள் கேட்டவர்களே.

ஆக, தேசிகன் விபவகாலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களோடும் ஒத்து வாழ்ந்து ஸகலரோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறிவந்தவர் என்பதில் ஒருவர்க்கும் ஒரு ஸந்தேஹமும் வேண்டா. வேதங்கள் வேதாந்தங்கள் ஸ்ம்ருதிகள் பாஞ்சராத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் திவ்யப்ரபந்தங்கள் இதர சாஸ்த்ரங்கள் ஆகிய எல்லாவற்றிலும் நிகரற்ற பாண்டித்யம் பெற்றிருந்த இப்பேராசிரியர் அக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுள் தலைமையான ஸ்தானம் பெற்றுத் திகழ்ந்தார். பித்ருச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்து ஸமயத்தில் வஞ்சித்துவிட்டார்களென்றும், திருமுடியில் படும்படி திருமாளிகை வாசலில் பாதரக்ஷையைக் கட்டி வைத்தார்களென்றும்......இப்படியாகச் சொல்லிவருகிற பொய்யான ஐதிஹ்யங்களை நம்பி ஸ்வாமி பக்கலில் குறை கருதவேண்டா. தம் மாதா பிதாக்களின் திருவத்யயனத்திற்கு பரமாப்தர்கள் பரமபக்தர்கள் அந்தரங்க சிஷ்யர்கள் என்றும்

படியானவர்களில் சிலரை நிமந்த்ரணத்திற்கு ப்ரார்த்தித்திருப்பரேயல்லது வழிப்போக்கர்களைச் சொல்லியிருக்கமாட்டாரே. அவர்கள் வாக்குத்தவறி ஸமயத்தில் வஞ்சித்துவிட்டார்களென்றால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? இவையெல்லாம் பிறரை தூஷிப்பதற்காக இடுகிற அவதாரிகையே யொழிய வேறில்லை. ஸ்வாமிக்கு விசேஷமான பெருமை ஏற்படவேணுமென்று கருதி இங்ஙனே கற்பனை செய்யப்படுகிற பொய்க் கதைகளால் பெருமைக்கு மாறான சிறுமையே ஏற்படும். பலர் இப்படிப்பட்ட ஐதிஹ்யங்களைப் பலகால் சொல்லியும் கேட்டும் பழகிவிட்டபடியால் "தூர்வாஸநாத்ரடிமத:" என்று ஆழ்வான் ஸாதிக்கிற ரீதியில் இந்தப் பொய்க் கதைகளில் திடநம்பிக்கையுண்டாகி, மெய்யுரைகளை எவ்வளவு கேட்டாலும் அதைத் திரஸ்கரித்துத் தங்களுடைய மூட நம்பிக்கையையே மேம்படக் கொள்ளும் ஜனங்களிடையே இத்தகைய தத்வவாதங்கள் பயன்படாவெனினும் விசாலமான நிலவுலகத்தில் எங்கேனும் என்றேனும் பயன்பட்டே தீரும். இக்காலத்திலேயே பலரிடத்திலும் பயன்பட்டும் வருகிறது.

தேசிகன் நம்பிள்ளையை நேராக ஸேவிக்கப் பெற்றவரல்லர்; முன்னமே அவர் திருநாட்டுக்கெழுந்தருளிவிட்டபடியாலே. ஆனாலும் நம்பிள்ளை திருவாக்கினின்று பெருகின மஹார்த்ததாரைகள் அவருடைய சிஷ்யப்ரசிஷ்யர்களின் வியாக்கியான க்ரந்தங்களிலே தேங்கியிருந்தபடியாலே அவற்றை ஆராவமுதமாக அநுபவித்துப் பேரின்பமடைந்த பேராசிரியர் தேசிகன். நம்பிள்ளை பக்கலில் நேராகக் கேட்டுப் பட்டோலை கொண்டவர்கள் பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையுமான இருவர். இவர்களுள் வடக்குத் திருவீதிப்பிள்ளையிட்டருளின வியாக்கியானங்கள் தேசிகனுக்குக் கிடைக்க ப்ரஸக்தியில்லாமலிருந்தது. பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களைத்தையும் தேசிகன் காலத்தில் விசேஷப்ரசாரமடைந்திருந்தபடியால் அவற்றை 'அமுதிலுமாற்றவினிது' என்கிற ப்ரதிபத்தியுடன் பருகிக்களித்தவர்களில் தலைவராவர் தேசிகன். இதை நாம் பல புத்தகங்களில் பலபல நிதர்சனங்களைக்காட்டி நிரூபித்திருக்கின்றோம். ஈண்டும் சிறிது நிருபணம் காண்மின்.

திருவாய்மொழியில் பத்தாம்பத்தில் முதல் திருவாய்மொழி "தாளதாமரை"யென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ்கின்றது. இத் திருவாய்மொழிக்கு அவதாரிகையிட்டருளின திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில்—"திருக்கண்ணபுரத்தி லெம்பெருமானை யநுபவித்து இப்போது திருமோகூரிலெம்பெருமானை யநுபவிக்கிறார்" என்று இவ்வளவே யருளிச் செய்தார். மேற்பாசுரங்களிலும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார்யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷமருளிச் செய்கிறார்கள்: அதாவது— ஆழ்வார், கீழ் மாலைநண்ணித் திருவாய்மொழியில் "சரணமாகுமென்கிற பாசுரத்தில் தம்முடைய பரமபத யாத்திரையை நிச்சயித்து அர்ச்சிராதி மார்க்க கதியை யறுதியிட்டு அந்த கதிக்குத் திருமோகூர்க் காளமேகப் பெருமானை வழித்துணையாகப் பற்றுகிறார் இத்திருவாய்மொழியில்—என்பதே. மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் 'தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம், காளமேகத்தைக் கதியாக்கி'' என்றருளிச் செய்தார். ஆசார்யஹ்ருதயத்தில் "மார்க்கபந்து சைத்யம் மோஹனத்தே மருவிற்று" என்று பணிக்கப்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை யிருபத்துநாலாயிரப்படி முதலானவற்றிலும் 'காளமேகப் பெருமானை வழித்துணையாகப் பற்றுகிறார்' என்றுள்ளது. இவ்விதமாக ப்ரமேய சிக்ஷை ஆறாயிரப்படியில் ஸூசனையாகக்கூட கிடையாதென்பது

நிர்விவாதம். திருமோகூரப்பனை ஸ்தோத்ரம் பண்ணுகிறாரென்னுமித்தனையே ஆறுயிரப்படியிலுள்ளது. இனி, தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் எவ்விதமாக அருளிச் செய்துளரென்று பார்க்கவேணும்.

ரத்நாவளியில் (104) *தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் "சிராந்திஹாரித்வ முக்கியை ராகாரைஸ் ஸத்கதிஸ் ஸ்யாத் ஜலத தநுருசிச் சேதி தேநாப்யதாயி" என்றார். "ஸத்கதிஸ்ஸ்யாத்" என்பதற்கு வியாக்கியானமிட்டவர்கள் "காளமேகப் பெருமானே வழித்துணை யென்று" என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோபநிஷத்ஸாரத்திலும் இப் பதிகத்தில் தேறின குணமாக "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ" என்றருளிச் செய்தார். *ஸத் கதிஸ் ஸ்யாத்* என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு *ஸத்பதவ்யாம் ஸஹாய மென்றவிது கைவிளக்கா யிருக்கின்றது. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு; எல்லாவற்றையும் நாம் காட்டியேயிருக்கிறோம். தேசிகனுக்கு ஆறுயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியாலே அதை ஒருகால் ஸேவித்து நிறுத்தி பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிறதென்கிற காரணத்தினால் தேசிகன் இதுதன்னையே நிதியாகக்கொண்டு இதையே தமக்குக் காலக்ஷேபக்ரந்தமாக ஆதரித்துவந்தாரென்பதே தத்துவம். அவர் ஈடு முப்பத்தாறுயிரப்படியையும் ஸேவிக்க பாக்யம் பெற்றிருந்தால் 'தொல்லையின்பத் திறுதி கண்டேனே' என்று சொல்லி *மொய்ம்மாம் பூம்பொழிற் படியிலே மது வனத்தில் வானர முதலிகள் பட்டபாடன்றோ பட்டிருப்பர். உண்மை இங்ஙனேயிருக்க, "ஆறுயிரப்படிக்குப் பின்புள்ள வியாக்கியானங்களில் தேசிகன் தோஷங்களைக் கண்டு நிகமபரிமளமென்றொரு அழகான வியாக்கியானம் எழுபத்துநாலாயிரப்படியாகத் தாமியற்றி யருளினார்" என்று நிராலம்பமாக எழுதுவது ப்ராமாணிக கோஷ்டிகளில் ஏற்கத் தக்கதன்று. ...

## நிகமபரிமளத்தைப்பற்றிச் சுருக்கமாகக் கேண்மின்

தேசிகன் திருவாய்மொழிக்கு விரிவான வியாக்கியானமாக நிகமபரிமளமென்றொரு க்ரந்தமிட்டிருந்தாரென்றும், அது அவரால் ஸ்வசிஷ்யர்களுக்கு ப்ரவசனமும் செய்யப்பட்டிருந்ததென்றும், ஆனால் அது நம்முடைய தௌர்ப்பாக்யத்தினால் இப்போது கிடைக்க வழியில்லாமல் லுப்தமாய்விட்டதென்றும் கூறிக் கண்ணீர் சொரிகிறார்கள். அந்த வியாக்கியானம் எவ்வளவோ அழகாய் எவ்வளவோ ஆச்சரியமாய் இருந்ததென்றும், நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாப்போலே பாவிகளான நமக்கு அது ப்ராப்தமாகாமற்போயிற்றே யென்றும் சொல்லிப் புலம்புகிறார்கள். இவ்விடத்திற்குச்சேர ஒரு ரஸிகர் ஒரு கதையை நிதர்சித்திருந்தார்; அதாவது, ஒரு தீர்க்கப்ரஹ்மசாரியாம்; அவர் தமக்கு விவாஹமாகாமலேயிருந்த அவமானத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டி உப்பிலியப்பன் ஸந்நிதிக்குச் சென்று தைமீ 5உ தனக்கு விவாஹம் நடத்த நிச்சயித்திருப்பதாக ஒரு பெண் பெயரைக் குறிப்பிட்டு சுபமுஹூர்த்தபத்ரிகை யச்சிட்டு பந்துமித்ரர்களுக்கு அது தைமீ 6 தேதிக்குப் பிறகு சேரும்படி யனுப்பிவிட்டு அங்குமிங்கும் சிலநாள் திரிந்திருந்து பிறகு ஒருநாளில் அந்தப் பெண் ஆசாரியன் திருவடியடைக்

இட்டதாக அனைவர்க்கும் மரணக் கடிதங்களனுப்பிவிட்டு 13 நாள் பொறுத்து விடுவந்து சேர்ந்து 'ஐயோ! அவனுடைய முகம் எவ்வளவு அழகு தெரியுமா? கூந்தல் என்ன அழகு தெரியுமா? குரல் என்ன கம்பீரம் தெரியுமா? என்று பலபல வுஞ் சொல்லிப் புரண்ட முது போதைப் போக்கினுராம். இந்த கதைக்கும் நிகம பரிமள கதைக்கும் சிறிதேனும் வாசியுண்டோ? தேசிகனுக்கு விபுல வியாக்கியான மெழுதத் தெரியாதென்று யாரும் சொல்லகில்லார். திருவாய்மொழி விஷயத்தில் தாத்பர்ய ரத்நாவளியும் ஸாரமும் அருளிச்செய்து க்ருதக்ருத்யரானர் என்னுமிவ் வளவே உண்மை. ஒருகால் நிகம பரிமளமருளிச் செய்திருந்தால் அது பெரிய வாச்சான்பிள்ளை வியாக்யானமாகிற ஸ்ரீபாஷ்யத்திற்கு ச்ருதப்ரகாசிகை போன் றிருக்குமேயொழிய வேறுவிதமாக இருக்க ப்ரஸக்தியே கிடையாது. இதனையும் மத்யஸ்தர்களின் மனத்தில் நன்கு நிலை நாட்டுவோம்.

அமலனுதி பிரானுக்கு தேசிகனருளிச் செய்த வியாக்கியானம் முனிவாஹந போகமென்னும் பெயரால் ரஹஸ்யங்களுள் ஒன்றாக விளங்கி வருகின்றது. இதில் பூர்வாசார்ய வியாக்யான கண்டனமாக ஓரக்ஷரமாவது காணக்கிடைக்கிறதோ? இல்லை. இல்லை யென்பது மாத்திரமன்று: பெரியவாச்சான்பிள்ளை போல்வா ருடைய திருவுள்ளத்தை நன்கு ஸ்தாபிக்கவல்ல ஸ்ரீஸூக்திகளையே அருளியுள் ளார். இதை மறுக்ககிற்பாருளரேல் முன்வருக.

ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே முன்வருவாரில்லை யென்று நாம் நாற்பது வருடமாகச் சபதஞ் செய்து வருகிறோம். இவர்கள் இவற்றில் அத்ருஷ்டி மபிநீய வாழ்ந்துவருகிருர்களத்தனை போக்கி வேறொன்றும் செய்யகில்லார். தங்க ளுடைய அசட்டு வாதங்களை விட்டிட்டால் இளப்பமாகுமென்னுமித்தனையே கொண்டு அவற்றை விடாமல் மறுபதிப்புகள் செய்துகொண்டு காலங்கழிப்பது ஒன்றே இவர்கள் பணி.

D. R. ஐயங்கார் எழுதி மறு பதிப்புஞ்செய்த பூர்வாசார்ய நிந்தாமயமும் பொய்யுரைமயமுமான தேசிக சரித்திரத்தில் கீழ்க்கண்ட வாக்கியங்கள் காண்மின்:

1. தேசிகனுடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யப்ரபந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர்களாக மாத்திரம் இருந்தார்களே யன்றி ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிற மதத்தினரோடு வாதஞ் செய்ய உரியராக இல்லை.

2. "தாம் கற்காத ஸ்ரீபாஷ்யாதிகளை நன்கு கற்றுப் பன்முறை ப்ரவசனஞ் செய்து, தாம் கற்ற பிரபந்தங்களிலும் தம்மிலும் தெளிவான ஞானத்துடன் திகழ்ந்து தம்மிலும் மிகுந்த ஆதரத்தை அப் பிரபந்தங்கள்பால் செலுத்திய தேசிகன் விஷயத்தில், அதற்குமுன் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்துவந்தவர்களும் அவர் சிஷ்யர் களும் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டனர்: அவர்களால் ஸ்வாமியடைந்த கஷ்டங்கள் பல." என்று.

இந்த வாக்யங்களால் பூர்வாசாரியர்களுக்கு இரண்டு வகையான அவத்யம் தெரி விக்கப்படுகிறது; (1) திவ்யப்ரபந்தம் தவிர வேறொன்று மறியாதிருந்தார்க ளென்றும்; (2) தேசிகனைப் பலவகையாகப் பரிபவப்படுத்தவும் ஹிம்ஸிக்கவுமே அவ்வாசார்யர்கள் சிஷ்யர்களைச் சேர்த்துவைத்துக் கொண்டிருந்தார்களென்றும்

இவ்வருமையான விஷயத்தை யோகத்ருஷ்டியாலோ வேறு த்ருஷ்டியாலோ கண்டு பிடித்தவருடைய மேதைக்கு த்ருஷ்டி தோஷம் வாராதிருக்கவேணும். "ஸ்ரீரங்கத்திலிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள்" என்று ஸாமான்யமாக எழுதியிருந்தாலாவது தொலையட்டுமென்றிருக்கலாம். அங்கு ஆசார்ய பீடத்தை அலங்கரித்திருந்த மஹாசார்ய ஸார்வபௌமர்களின்மீதுமன்றோ எறிப்பாய்கிறது இவருடைய அஸூயாப்ரவாஹம்.

அவ்வாசார்யர்கள் என்றைக்கோ திருநாட்டுக்கெழுந்தருளிவிட்டாலும், உலகம் நிறைந்த புகழ் வாய்ந்த அவர்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகள் மறையவில்லையே. தேசிகனும் சிரஸா வஹிக்கப்பெற்று தம்முடைய க்ரந்த நிர்மாணங்களுக்கும் வழிகாட்டியாகக்கொண்ட அந்த திவ்ய க்ரந்தங்களை ஸேவிக்குமுலகமெல்லாம் "நாந்ருக் வேத விநீதஸ்ய நாயஜுர் வேததாரிண:, நாஸாம வேத விதுஷச் சக்ய மேவம் ப்ரபாஷிதும். நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம்" என்று சக்ரவர்த்தி திருமகனுர் திருவடி திறத்தில் சொன்னதெல்லாம் இவ்வாசிரியர்களுக்கே யொக்கும் என்று கண்ணுங்கண்ணீருமாயிருந்து கொண்டாடா நின்றது. நம்பிள்ளையைப்பற்றிப் பெரியவாச்சான்பிள்ளை யெழுதும்போதும் [பெரிய திருமொழி 5-8-7, வியாக்கியானத்தில்]—

> "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையுமதிகரித்து பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து, போது போக்கும் அருளிச் செயலிலே யாம் நம்பிள்ளையைப்போலே"

என்றருளியுள்ளார். ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை அலங்கரித்த ஒவ்வொரு ஆசிரியரும் இத்தகைய யோக்யதை பெற்றன்றோ விளங்கினர். அப்படிப்பட்ட மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளைக் காதால் கேட்கப்பெறாததோடு கண்ணால் பார்க்கவும் பாக்யமற்ற இந்த D. R. ஐயங்கார் தன்னையறியாமல் அவர்களுடைய யோக்யதையில் குறைகூறப்புகுந்தது மஹத்தான ஸாஹஸம். அவர்களின் ஞானரத்னத்தை மதிப்பிட இவரா அதிகாரி?

* குழாங்களாயடியீருடன் கூடி நின்றுடுமினே * என்ற விடத்திற்கு வியாக்யானமிட்டருளின அப்பேராசிரியர்கள்,

> "அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற நீங்கள் நால்வரிருவர் இங்கிருக்கும் நாளுநாளும் த்யாஜ்யமான அர்த்தகாமங்களைப்பற்றிச் சீறுபாறென்னாதே நம் பெரிய குராத்திலே போய்ப்புகுமளவும் ஒருமிடறாயநுபவிக்கப் பாருங்கோள்."

என்றருளிச் செய்யா நின்றார்கள். இப்படிப்பட்ட உதாரஹ்ருதயர்களைச் சில அவ்யபதேச்யர்கள் கைபோன போக்கில் எழுதிவைக்குமளவால் என்னகும்? "ஸ்வஹஸ்தேநோத்க்ஷிப்தைஸ் ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர்கலுதல மாலிம்பதிஜட:" என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்தியே பலிக்குமத்தனை. அபீதிஸ்தவத்தில் "க்வசந ரங்கமுக்யே விபோ! பரஸ்பர ஹிதைஷிணாம் பரிஸரேஷுமாம் வர்த்தய." என்று கதறுகிறார் தேசிகன். ஸ்ரீரங்கவாஸத்தையிழந்து அந்யத்ரவஸியாநின்ற அவர் "ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற பரஸ்பரஹிதைஷிகளான பரமாசார்யர்களின் திருவடி வாரத்திலே அடியேனை வாழ்விக்கலாகாதா?" என்று அரற்றுகிறார். அவர் எந்த மஹாசார்யர்களைப்

பரஸ்பர ஹிதைஷிகளென்றும் ஸஹவாஸ போக்யர்களென்றும் போற்றினரோ அவர்களையே இந்த D. R. ஐயங்கார் அஸூயாமத மாத்ஸர்ய தூஷிஷ்டர்களென்று பழிக்கிறர். அந்த மஹாசார்யர்களாலும் தச்சிஷ்யர்களாலும் தேசிகன் பலவகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் கஷ்டங்களையும் அடைந்ததாக ஸாக்ஷாத்கரித்து எழுதுகின்றவிவர் எத்தனை தலைமுறையாக தேசிக ப்ராவண்யம் கொண்டவர் என்பதை முக்கியமாக விமர்சிக்க வேணும். இவர்களை நவீனர்களென்றே வ்யபதேசித்து வருகின்ற நாம் விபுலமாக நிருபணங்கள் செய்திருப்பது ஜகத்ப்ரஸித்தமேயாயினும் இங்கும் விளக்கப்படுகின்றது

## நவீநர்களின் நவீநத்வஸ்தாபனம்

பெரும்பாலும் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொண்டு அவற்றை யடியொற்றியே அருளிச் செய்பவர் வேதாந்தவாசிரியர் என்னுமிடத்தை நாம் நமது நூற்களில் முப்பது நாற்பது விஷயங்களை யெடுத்துக் காட்டி விரிவுக்கஞ்சாமல் நிருபித்திருக்கிறோம். இரண்டு வருடங்களுக்குமுன்பு தேசிகஹ்ருதயம் என்றொரு நூலை யெழுதி ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருக்கிறோம். அதன் முன்னுரையை மட்டும் இங்கு உதாஹரிக்கிறோம்; (அதாவது)—

"வேதக் கடல்கடைந்த வேதாந்த வாசிரியன்
போதக் கடலாய்ப் புனிதமாய்க்—கோதற்ற
தேன்மொழிகள் தந்தருளித் தீய பொருள்திரளைத்
தானொழித்தான் தானே சரண்.

*நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தைஸ் த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை ரிதமகிலதம:கர்சநம் தர்சநம் ந:* என்கிறபடியே, நம்மாழ்வார் திருவருளால் ஸகலார்த்த விசேஷங்களையும் நிதிபெற்றாற் போலே பெற்றுவாழ்ந்த ஸ்ரீமந்நாதமுனிகள் அநுஸந்தித்துக்கொண்டிருந்த ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களை மணக்கால்நம்பி வழியாக லபிக்கப்பெற்ற ஆளவந்தார் அவ்வர்த்த விசேஷங்களைத் தம்முடைய திவ்யகடாக்ஷ மூலமாகவும் பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் முதலான ஸ்வசிஷ்யவர்க்க மூலமாகவும் எம்பெருமானார் பக்கலிலே தேக்கியருள, அவை எம்பார் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் வழியாகவும், திருக்குருகைப்பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்களின் வழியாகவும் ப்ரவஹித்து அஸ்மதாதி ஸம்ஸாரி சேதநஸமுஜ்ஜீவந ஸாதநங்களாய் விளங்கி வாராநின்றன. மேலே நிர்தேசித்த ஆசார்யவர்யர்கள் பேசிற்றே பேசும் ஏககண்டர்களாகையாலே இவர்களின் திவ்யஸூக்திகளிலே அர்த்தபேதம் காண்கைக்கு அவகாசமில்லை. ஸ்வல்பயோஜநாபேதம் கண்டால் காணலாமத்தனை. இவ்வுண்மையை உணராதார் சிலர், வேதாந்த வாசிரியர் தனிப்பட்டிருந்து வேறுபட்ட கொள்கைகளைக் கொண்டிருந்தாரென்றும், நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலானோர் கொண்டிருந்த கொள்கைகளை அசாஸ்த்ரீயங்களென்று கண்டித்துவிட்டாரென்றும் சொல்லிப்போருவது ஆதாரமற்றதென்பதையும், நவீநர்கள் ஆதரித்து வருகிற அர்த்தங்களுக்கும் ஆசரித்துப் போருகிற அநுஷ்டானங்களுக்கும் வேதாந்த தேசிக க்ரந்தங்களில் ஆதாரமில்லையென்பதையும் ஸாரமாகவும் ஸங்க்ஷேபமாகவும் உபபாதிப்போமிதில். தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? வடகலை ஸம்ப்ரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? என்று பலர் தெரிந்துகொள்ள

விரும்புகிறார்கள். அவற்றை இன்னவை யின்னவை யென்று தெரிவிப்போமிங்கு. அதற்கு முன்னே ஸாரமாக வொன்று தெரிவிக்கிறோம்: நற்கதி பெறவேணுமென்கிற நசை இரு கலையார்க்கும் துல்யமாயிருக்கச் செய்தேயும், நாம் பேறு பெறுவதற்கு முக்கிய ஸாதனம் பகவத் ப்ரவ்ருத்தியே யல்லது ஸ்வப்ரவ்ருத்தியன்று என்பது தேசிகனுட்பட ஸகல தென்னாசாரியர்களின் கொள்கை. நம்முடைய ப்ரவ்ருத்தியினால்தான் நாம் பேறு பெற முடியுமென்பது மற்றையோர்களின் கொள்கை. இதுதான் இரு கலையார்க்கும் தலையான பேதமென்று ஸாரமாகக் கொள்ளக்கடவது. மற்றைப்படியான பேதங்களாவன:—

| தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் | வடகலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் |
|---|---|
| 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகம் | 1. பகவத் க்ருபை ஸஹேதுகம் |
| 2. சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு | 2. ஈச்வரனைப் பெறுவது சேதநனுக்குப் பேறு |
| 3. பரகத ஸ்வீகாரமே நன்று | 3. ஸ்வகதஸ்வீகாரமேதானுள்ளது. |
| 4. ப்ரபத்தி அநுபாயம் | 4. ப்ரபத்தி உபாயம் |
| 5. பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமே யுள்ளது; உபாயத்வமில்லை | 5. பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தோடு மோக்ஷப்ரதத்வமுமுண்டு |
| 6. பிராட்டிக்கு அணுத்வமேயாம் | 6. பிராட்டிக்கு விபுத்வமேயுள்ளது |
| 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமில்லை | 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமுண்டு |
| 8. தயையென்பது பரதுக்கதுக்கித்வம் | 8. தயை பரதுக்கநிராசிகீர்ஷாரூபம் |
| 9. வாத்ஸல்யம் தோஷபோக்யதா ரூபம் | 9. வாத்ஸல்யம் தோஷாதர்சித்வ ரூபம் |
| 10. ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம் | 10. விஹிதவிஷய ப்ரவ்ருத்தி அவர்ஜநீயம் அதைவிடக்கூடாது |
| 11. எம்பெருமானுடைய வ்யாப்தி பரிஸமாப்யவர்த்தநம் | 11. எம்பெருமானுக்கு பரிஸமாப்ய வர்த்தநம் கிடையாது |
| 12. ஜாதி நசிக்கும் | 12. ஜாதி நசிக்கமாட்டாது |
| 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தம் | 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூபாநுரூபமே |
| 14. கைவல்ய மோக்ஷம் புநராவ்ருத்தியற்றது | 14. கைவல்ய மோக்ஷத்திற்குப் புநராவ்ருத்தியுண்டு |
| 15. நமஸ்காரத்தில் ஸக்ருதாவ்ருத்தி போதும் | 15. அஸக்ருந் நமஸ்காரம் வேண்டும் |
| 16. அத்ருஷ்டார்த்த அநுஷ்டானமென்று தனியேயில்லை | 16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானம் தனிப்பட ஆவச்யகம் |

இப்படி பொரு பதினாறு விஷயங்களை வைத்துக் கொள்வோம். "இப்பதினாறு விஷயங்களில்தானு பேதம்? வேறு கிடையாதா?" என்று கேட்க வேண்டாம். மற்றும் சிலவோ பலவோ இருக்கலாம்; அவை முக்கியமானவை யல்லவென்று விடுக்கத் தக்கன. முக்கியமான விஷயங்களை சர்ச்சிக்கும்போது அவாந்தர விஷயங்களாகக் கிளரும் பேதங்களை இங்கே கொள்ளவில்லை. மேலே காட்டிய பேத விஷயங்களில் தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்களென்று நாம் காட்டியுள்ள அர்த்தங்களை தென்னுசார்யர்களென்று ப்ரஸித்தர்களான ஸதாசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திகளிற் போலவே ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு திவ்யஸூக்திகளிலும் பெரும்பாலும் காண்கிறோம். இதைமட்டும் விளக்கவே தேசிக ஹ்ருதயமென்னுமிச்சிறுநூல் அவதரிக்கின்றது. இதராசார்ய ஸூக்திகளையும் காட்டி விஸ்தரம் செய்யாமல் தேசிகஸூக்திகளை மட்டுமே காட்டி நிற்போமிதில்.

[இவ்வளவே அந்த தேசிக ஹ்ருதய நூலிலுள்ள அவதாரிகை.]

உபய ஸம்பிரதாயங்களுக்குமுள்ள அர்த்த பேதத்தையும் ஆசாரபேதத்தையும் எடுத்துக்காட்டினதோடு நில்லாமல், தேசிக திவ்ய ஸூக்திகள் தென்னுசார்ய ஸம்பிரதாயார்த்தங்களையே தழுவியவதரித்தவை என்பதைமேலே பரக்க நிரூபித்திருக்கிறோமென்பது ஜகத் ப்ரஸித்தமாதலால் அதைப்பற்றி இங்கு விரிவு வேண்டாவென்று நிற்கிறோம்.

மிக நவீந காலத்திலேயே தேசிக ஸம்ப்ரதாயமென்றும் தேசிக தர்சனமென்றும் வ்யபதேச பேதங்களை ஏக தேசிகள் உண்டாக்கி வளரச்செய்து வருகின்றனர்கள். அத்வைதமதத்தில் சங்கராசாரியர்க்கு இப்பால் பலபல மஹான்கள் சண்ட ப்ரசண்டர்களாய்த் தோன்றிப் பலபல நூல்களுமிட்டிருக்கிறார்கள். அன்னவர்களில் ஒருவருடைய பெயரையிட்டும் தர்சநவ்யபதேசம் தோன்றினதில்லை. இதர ஸம்ப்ரதாயங்களைப்பற்றி நமக்கென்ன? நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் [பகவத் ராமாநுஜ ஸித்தாந்தத்தில்] தர்சந துரந்தரர்களாகப் பலபல ஆசாரியர்கள் விளங்கியிருந்தார்கள். அவர்களில் ஒரு ஆசாரியருடைய பெயரையிட்டும் தர்சநவ்யபதேசம் தோன்றிற்றில்லை. கிம் பஹுநா? தேசிக தர்சநம், தேசிக ஸம்ப்ரதாயம் என்கிற வ்யவஹாரத்தை நாற்பதைம்பது ஆண்டுகட்கு முன்பு எழுத்திலோ வாய்மொழியிலோ யாரும் கண்டதில்லை, கேட்டதில்லை. தேசிகனிடத்திலே பரமபக்தியுக்தர்களாய் விளங்கின (திருக்குமாரரான, நயனாசார்யர், ப்ரஹ்ம தந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமிகள். சண்டமாருதம் தொட்டயாசார்யர், ஆசார்ய சம்பூகாரர் முதலானோருடைய திருவாக்குக்களில் ஏதத்ப்ரஸ்தாவ லேசமேனுமுண்டோ? அஸம்பாவிதமானவிது எப்படியிருக்க முடியும்? அதிநவீநமாகத் தோன்றின வ்யபதேசமன்றோவிது.

நநு, முற்காலத்தில் இப்படி வ்யபதேசமில்லையென்பதை ஒப்புக்கொள்வோம்; இது அஸங்கதமான வ்யபதேசமன்றோ; தேசிகனுடைய அப்ரதிமமான பெருமைக்குச் சேர நூதனமாகவே இந்த வ்யபதேசத்தை ஸ்ருஷ்டித்தோமென்றால் என்ன அவத்யம் வந்திடும்? இதில் ஆக்ஷேபமோ வெறுப்போ கொள்பவர்கள் தேசிகனிடத்தில் பக்தியுக்தர்களாகவல்லாமல் விப்ரதிபந்நர்களாகத்தானேயிருக்க வேண்டும். பரமபக்தி கார்யமானவிதனை ஏதுக்கு ப்ரஸங்கித்துப் பழிக்க வேண்டும்? என்று பிறர் சொல்லக்கூடும். இது அஸமஞ்ஜஸமான சொலவே

யாகும். கேண்மின்; ஒரு வகுப்பினர் கூரத்தாழ்வானிடத்தில் பரமபக்தியுக்தர் களாய் கூரேச தர்சநம், கூரேச ஸம்ப்ரதாயமென்பது, மற்றொருவர் பட்ட ரிடத்தில் பரமபக்தியுக்தராய் ஸ்ரீபட்டார்ய தர்சநம், ஸ்ரீபட்டார்ய ஸம்ப்ரதாய மென்பது,......இப்படியாக அவரவர்கள் மனம் போனபடியெல்லாம் வ்யப தேசிக்கவேண்டிவரும். ஸ்ரீவிஷ்ணு சித்தார்யரென்கிற எங்களாழ்வான், தேசிக னுடைய மாதாமஹரான ஆத்ரேய பத்மநாபார்யர், நடாதூரம்மாள் முதலானோ ரும் மஹாஜ்ஞாநநிதிகளாக விளங்கிவந்தார்கள்; இவ்வாசார்ய சிகாமணிக ளிடத்திலே விசேஷித்து பக்தியுக்தர்களும் இருந்துவந்தார்கள், இருந்துவருகின் றார்கள்; இவர்களும் இத்தகைய அதிப்ரவ்ருத்திகளில் இறங்கிற்றிலர். இனி இவர்கள் என்ன சொல்லவேண்டுமென்றால், தேசிகனுடைய தர்சனம் லோக விலக்ஷணமாயிருந்தபடியால்—இருக்கின்றமையால் தேசிக தர்சனமென்று வ்யாவ்ருத்தமாக வ்யவஹரிக்கவேண்டியது ஆவச்யகமும் யுக்தமுமாகுமென்ன வேண்டும். அப்போது இந்த தர்சநம் பகவத்ராமாநுஜ தர்சநத்திற்கு பஹிர்ப் பூதமேயொழிய அதைச் சார்ந்ததன்று என்று கல்வெட்டாகத் தேறிநிற்கும். உண்மையில் தேசிகன் தம்முடைய ஸித்தாந்தமாகக் கொண்டருளின அர்த்த விசேஷங்களில் எதையும் ஆதரியாதவிவர்கள் தங்களை தேசிக தர்சநஸ்தர் களாகச் சொல்லிக்கொள்வதும் ஸாஹஸம்.

இவ்விஷயத்தில் விவேகிகள் அவிவேகிகள் என்னும் வாசியற யாவரும் ஸமரூபமாகவே மருண்டுகிடப்பதால் இதைப்பற்றி நாம் ஆர அமர விமர்சித்து வெளியிட்டிருப்பவற்றின் ஸாரத்தைக் கேண்மின்.

ஸ்ரீபாஷ்யகாரர்க்குப் பிறகு எத்தனை ஆசாரியர்கள் திருவவதரித்திருக் கிறார்கள்; அவர்களுடைய ச்ரேணியில் நம்பிள்ளை முதலாக மணவாள மாமுனிகளீறாகவுள்ள ஆசாரியர்களை இவர்கள் அநாதரித்தாலும் ஏனைய ஆசாரி யர்களை அநாதரிக்க ஹேதுவில்லை. தேசிகன் ஒருவர் தவிர வேறு எந்த ஆசாரி யரையாவது இவர்கள் ஆதரிப்பதுண்டோ? கூரத்தாழ்வான், பட்டர் போல் வாரை ஆதரியாமை கிடக்கட்டும்; மிகச் சிறந்த க்ரந்தங்களையருளிச் செய்து வைத்திருப்பவர்களான பிள்ளான் எங்களாழ்வான் நடாதூரம்மாள் ச்ருதப்ரகா சிகாபட்டர் ஆகிய இவர்களையாவது ஆதரிப்பதுண்டோ? "ஏன் ஆதரிப்பதில்லை? நன்றாக ஆதரித்தே வருகிறோம்" என்று பதில் சொல்லிவிடு வர்கள். அதில் யாது பயன்? இவ்விஷயத்தை நாம் சென்ற வருடத்தில் எழுதி வெளியிட்டிருந்தோம். அதைக்கண்ட மறுநாளே ஒரு குடீரத்தில் திருக்குருகைப்பிரான்பிள்ளானை வைத்துவிட்டோமென்று பறைசாற்றினர். கூரத்தாழ்வான் எம்பார் முதலியாண்டான் முதலான ஆசாரியர்களுக்கு அவ ரவர்களின் திருவவதார ஸ்தலங்களில் எப்படிப்பட்ட ஸந்நிதிகள்! எப்படிப் பட்ட உபலாலனங்கள்! இவை எத்தனை வருஷகாலமாக நடந்துவருவன! என்பதை ஆராய்வாரில்லையே. அனந்தாழ்வான் எம்பெருமானுடைய நிய மனத்தினால் திருமலையில் விசேஷ கைங்கர்யங்களைச் செய்துகொண்டு வாழ்ந் தார்; அவருக்குத் திருப்பதியிலும் திருமலையிலும் எவ்வகையான சீரும் சிறப்பு களும் நடந்துவருகின்றன வென்பது தெரியுமோ? அருளாளப்பெருமானெம் பெருமானுடைய சிறப்புகளும் திவ்யதேச விசேஷங்களில் ஸுப்ரஸித்தம்.

இவ்வாசார்யர்களுக்கு ஏற்பட்டுள்ள சிறப்புகள் இன்று நேற்றல்ல. நெடுநாளாக நிகழ்ந்துவருவன வென்பது மறக்கற்பாலதன்று. அவ்வாசாரியர்களைப் போற்றும் பரம்பரையிற் சேர்ந்த பரிவர்கள் இடையறாமல் அநுஸ்யூதர்களாக வருவதனால் அவ்வவ்வாசாரியர்களுக்கு நெடுநாளாகவே சீரும் சிறப்பும் குறையற நடந்துவருகின்றன. எதிர்த்தலையான பரம்பரை அநுஸ்யூதமாக வந்ததன்றிக்கே இடையில் தோன்றின தென்கிற காரணத்தினாலேயே அந்த பரம்பரையிற் படித்தவர்களுக்கு ஒரு ஆசார்யருடையவும் திருநக்ஷத்திராதி பரிபாலனமோ வேறு எவ்விதமான உபலாலனமோ ப்ராப்தமாக வழியில்லாமற் போயிற்று. வீணான பாத்திரச் சண்டையைக் கிளப்பிக் கலஹம் செய்யவும் பூர்வாசாரியர்களை தூஷிக்கவுமே அமைந்தது. இவர்களது போதுபோக்கு

### ப்ராஸங்கிகமாகத் தனியனைப்பற்றிப் பேசுவோம்

திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஆரம்பத்தனியனாக*ஸ்ரீசைலேசதயா பாத்ரத் தனியனே பகவந்நியமனத்தினால் ப்ராமாணிகமானது. பிறகு 3-4 நூற்றாண்டுகள் கடந்த பின் விவாத நிமித்தம் மற்றைத்தனியனும் அதைச் சேர்ந்த வாழித் திருநாமங்களும் போட்டியாகப் பிறந்தவை. அச்சுக்கூடங்கள் ஏற்பட்ட பின்பு அவரவர்கள் யதேஷ்டமாக எழுதியச்சிடுமவற்றால் சில சரித்திரங்கள் தலைதடுமாறின நிலைமையில் வந்துவிட்டன. இப்படியே சில ஆண்டுகள் கழிந்துவிட்டால், பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவும் ஆய்விடுகின்றது. பாமரஜனங்களின் ப்ரதிபத்தி எவ்வாறாக இருந்தாலும் விவேகிகளின் உள்ளம் எஞ்ஞான்றும் உண்மையை உள்ளபடி கடைப்பிடித்தேயிருக்கும். எத்தனை யுகமானாலும் உண்மையான செய்தி உலகில் ஒரு புறத்திலாவது உலாவியே நிற்கும். "இது அடியோடு பொருந்தாத விஷயம்" என்று விவேகிகள் உணர்ந்தபின்புங்கூட ஆக்ரஹத்தாலே பற்றினதுவிடாதொழிய ப்ராப்தமாகிறது. இந்த பிரபல ஆபத்தில் தப்பிப்பிழைப்பார் மிகச் சிலரே. இப்போது நாம் விவேகிகள் உகக்க நிரூபிக்குமிதனைக்கண்டு அவரவர்கள் தம்தம் கொள்கையை மாற்றிக்கொள்ளப் போகிறார்களென்று நமது ப்ரதீக்ஷையல்ல. இன்னமும் அதிகமாகவே பிடிவாதம் கொள்ளவுங் கூடும். ஆனாலும் சில பிராமாணிகர்களுக்காவது பயன்படுமென்றெண்ணியே உண்மையை விளக்குகிறோம். ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் தோன்றி அறுநூறு வருஷம் பூர்த்தியானதாக வைத்து, அதற்காகப் பெரியதோருத்ஸவம் நடத்துவதாகச் சில வருஷங்களுக்கு முன்பு பிரபல கோலாஹலம் நடந்தது. அப்போதுதான் இந்த பாத்திரத் தனியனைப் பற்றி ஆழ்ந்து பராமர்சிக்கவும் உண்மையான மருமங்களை வெளியிடவும் ஆவச்யகதை ஏற்பட்டது. தனியனுக்கு ஒரு மஹோத்ஸவம் கொண்டாட வேணுமென்று ஆசைகொண்டாலும், உண்மையில் எது தனியனோ, எது மிக்க பெரும்புகழ் படைத்ததோ அதற்கன்றோ உத்ஸவம் கொண்டாட வேண்டும். ஸ்ரீமாந் வேங்கடநாத தனியனே உண்மையான பெருமையுடையது. தேசிகனுக்கு எவ்வளவு பெருமையுண்டோ அவ்வளவு பெருமை இந்தத் தனியனுக்கு முண்டென்றால் மிகையாகாது. இதுவே ஸகல ஸஜ்ஜந பரிக்ருஹீதம். இதுவே தேசிகனுடைய திருவவதார ஸ்தலத்திலும் ஸமய விசேஷங்களில் மேன்மை

பெற்று விளங்குவது. இதுவே ஒருவிதமான பங்கத்தையும் பெறாதது. இதுவே தேசிகன் காலத்தில் அவதரித்தது. இதுவே நாடு நகரமெங்கும் பரவியது. மற்றொரு தனியனும் அப்போதே அவதரித்தது என்பவர்களுங்கூட ஸ்ரீமாந்வேங்கட தனியனே முந்துறமுன்னம் அவதரித்ததென்பதை இசைகின்றார்கள். பாத்திரத்தனியன் பிறப்பதற்குமுன் ஒன்பதேகால் வருஷத்திற்கு முன்னமே ஸ்ரீமான் தனியன் அவதரித்ததாக எழுதியுள்ளார்கள். பலசிறப்புக்கள் பெற்ற அந்தத் தனியனை அநாதரித்து, சண்டைத் தனியனுக்குச் சிறப்புச் செய்ய முயன்றவர்களின் கருத்து எதுவாயிருக்க வேணுமென்பதை யார்தாம் அறியார்? ஸ்ரீமான் வேங்கட தனியனுக்காக ஒரு சிறப்பு நடத்துகிறோமென்றால் இதில் ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸமரஸர்களாய்க் கூடியிருந்து அநுபவித்துக் குளிரக் கூடும். தனியனுக்கு உத்ஸவமென்பதே வெகு அழகு!

இனி இந்த பாத்திரத்தனியன் தேசிகன் காலத்திலேயே ஜனித்ததாகச் சொல்லுவது உண்மைதானா? என்று பரிசீலிப்போம். ஏற்கனவே ஸ்ரீமான் வேங்கடதனியன் அவதரித்து வீறுபெற்றிருக்கும்போது இந்த பாத்திரத் தனியன் பிறக்க என்ன ப்ரஸக்தி? ஸம்ஸ்க்ருதக்ரந்த காலக்ஷேபத்திற்காக அந்தத்தனியனும், த்ராவிடக்ரந்தகாலக்ஷேபத்திற்காக இந்தத் தனியனும் தோன்றினதாகக் கூறுகின்றார்கள். ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் எம்பார் ஆழ்வான் பட்டர் பிள்ளான் அம்மாள் அப்புள்ளார் முதலான ஸகல ஆசார்யர்களுக்கும் எந்தக்ரந்த காலக்ஷேபத்திலும் ஒரு தனியன் தான் வழங்குவதாகவுள்ளது. ஸமாச்ரயண பரம்பரைக்காக மூன்றாவதொரு தனியன் ஏற்படவேண்டாவோ? ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் ஒவ்வொரு தனியன் ஏற்படவேண்டாவோ? த்ராவிட க்ரந்த காலக்ஷேபத்திற்காகத் தனியே ஒரு தனியன் ஏற்பட்டதென்றால் அது தமிழ்ப்பாசுரமாக இருந்தாலாவது இசையலாம். ஏற்கனவே உள்ள தனியனில் என்ன குறைகண்டு புதிய தனியன் இயற்றினார்களென்பது தெரியவேணும். ஸ்ரீமாந் வேங்கட தனியனில் தேசிகனுடைய ஆசாரியரைப்பற்றி ப்ரஸ்தாவமில்லாமையாலே ஒரு குறையிருந்ததென்றும், அக்குறைதீர ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் ஏற்பட்டதென்றும் எழுதியுள்ளார்கள். அப்படியானால் குறையோடு கூடின அந்தத் தனியன் லுப்தமாகி இதுவேயன்றோ ஸர்வஜநீநமாகப் பரிக்ருஹீதமாகவேணும்.

ஸ்வஸ்வாசார்யப்ரஸ்தாவமில்லாத பல ஆசாரியர்களின் தனியன்கள் ஹேயமாகவேணுமே. மாமுனிகளுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன் திருவவதரிப்பதற்கு முன்னே வேறொரு தனியன் அவசியம் இருந்திருக்கவேணும். ஒரு ஸம்வத்ஸர காலம் மாமுனிகள் திருவடிகளிலே ஈடுஸேவித்தவர்கள் ஒரு தனியனைச் சொல்லித்தானே ஸேவித்திருக்கவேண்டும். அந்தத்தனியன் இப்போது யாருக்காவது தெரிந்துளதோ? முக்கியமானதொன்று அவதரித்துவிட்டால் அமுக்கியமானது அடங்கிவிடுமன்றோ. ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் தேசிகன் காலத்தில் ஜனித்திருந்து உகக்கப்பட்டிருக்குமாகில் பிறகு ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஜீவித்திருக்க ந்யாயமுண்டோ? ஸகல ஸந்தர்ப்பங்களிலும் இந்த பாத்திரத் தனியனையே அநுஸந்திக்க என்ன தடை? இதை விவேகிகள் ஆராயலாகாதா? ஏற்கனவே சிஷ்டபரிக்ருஹீதமாயிருந்த ஸ்ரீமான் வேங்கட தனிய

னுக்கு லோபம் செய்யக் கூடாமையாலே அதற்கும் ப்ரசாரமிருக்க வேணு மென்று கருதி ஒரு வ்யவஸ்தை பண்ணினர்கள் என்னில்; இங்கே கவனிப் பது ;—நம்மாழ்வாருடைய தனியனாக இப்போது உலகில் வழங்கி வருகின்றது *மாதாபிதா யுவதய:* என்கிற (ஆளவந்தாரருளிய) ச்லோகம். இது அவத ரிப்பதற்கு முன்னே பல ஆசாரியர்கள் நம்மாழ்வாருக்குத் தனியன் அநுஸந்தி யாமலிருந்திருக்கவில்லை. ஸ்ரீ மதுரகவிகள் ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக்கொண் டார் மணக்கால் நம்பி முதலானவர்கள் பல்லாயிரவர் அநுஸந்தித்த ஆழ்வார் தனியன் எங்கே? என்றால் என்ன பதில் சொல்லுவோம். ஒருகாலத்தில் ஒரு தனியனுக்கு ப்ராபல்யம் ஏற்பட்டால் மற்ற தனியன் தன்னடையே மறைந்து போகுமன்றோ? மறைய வேணுமென்கிற அவசியமில்லை. ப்ரதானத் தனியன் என்கிற பெயர் பெறுமல் அதுவும் ஸாமாந்யஸ்தோத்ரமாக ஒருபுறமிருக்கலாம்.

ஸ்துதி ரூபமானவொரு பத்யமோ பாசுரமோ தனியனென்று வழங்கப் படுகிறது. ஒரு ஆசார்யருக்கு இப்படிப்பட்ட ஸ்துதிபத்யங்கள் பலபலவும் இருக்கலாம். ஆளவந்தார்க்கு *ஸ்வாதயந்நிஹ * நமோ நமோ யாமுநாய * இத் யாதிகளான பல ச்லோகங்கள் உண்டு. எம்பெருமானுர்க்கு *வந்தே வேதாந்த கர்ப்பூர* *தஸ்மை ராமாநுஜார்யாய *இத்யாதி ச்லோகங்கள் பல்லாயிரமுண்டு. இருந்தாலும் ஒரு ஆசார்யருக்கு ஒரு தனியன் தான் அஸாதாரணமாக அமை யும். அங்ஙனம் அஸாதாரணமான தனியன் தேசிகனுக்கு எது? என்றால், ஸ்ரீமாந் வெங்கட நாதார்ய: என்பதேயாம். 'இதவன்று' என்று யாரேனும் சொல்லவொண்ணுமோ? மிக நவீநமான ராமாநுஜதயா பாத்ரத் தனியனை ப்ராசி நம்போல் காட்டுவதற்கு இவர்கள் செய்த சூழ்ச்சிகள் இதனுடைய நவீநத்வத் தையே நன்கு ஸ்தாபித்துக் கொடுத்தனவென்பதை யார்தா மறியார்? இந்தத் தனியன் பிறந்த காலத்தைக் குறிப்பிடுவதாக ஒரு ச்லோகம் சிலர் வெளியிட் டிருக்கிறார்கள். [கல்யப்தேஷு சதுஸ்ஸஹஸ்ர சதபங்க்த்யப்தே.........ஸ்ரூச் லோகோவததார திவ்யமஹிமா ராமாநுஜோக்த்யாதிம:] என்பதே அது. இதைப்பற்றிப் பல விஷயங்கள்.

*சதுஸ்ஸஹஸ்ரசதபங்க்த்யப்தே* என்கிற பதம் வ்யுத்பந்நர் பிரயோகிப்ப தன்று. அவ்யுத்பந்நரின் கவனம் இது என்பது இதனாலேயே ஸுஸ்பஷ்டம். "கலியுக நாலாயிரத்து நானூற்று நாற்பதாவதில்" என்னும் விவக்ஷைக்கு இந்த பதம் ஒருகாலும் வாசகமாகாது. (சத:) என்பதை மேலுள்ள ஒவ்வொரு லக்கத்தோடும் சேர்த்துக் கொண்டாலும் [4440–வருஷங்கள்] என்று பொருள் படுமே யல்லது விவக்ஷிதமான ஒரு வருஷத்தை, (அதாவது 4440–ஆவது வரு ஷத்தில் என்கிற பொருளை) ஒருநாளும் காட்டாது. இந்த மருமத்தையறிந்து கொள்ள ஸம்ஸ்க்ருத பாஷையில் சிறந்த வியுத்பத்தி வேணும். (அப்தே) என்று ஏகவசனமிருக்கையாலே ஒரு வருஷத்தைத் தான் சொல்லும் என்ன வொண்ணாது: வியாகரணத்தில் (* ஸங்க்யா பூர்வோ த்விகு: * த்விகுரேகவச நம்) என்கிற அநுசாஸநத்தினாலன்றோ இந்த ஏகவசநம் ப்ராப்தமாகிறது. 4440 வருஷங்கள் என்று அத்தனை வருஷங்களையும் இச்சொல் காட்டியே தீரும். (ஆங்கிலத்தில் Five o'clock என்பதற்கும் Five Hours என்பதற்கும் உள்ள வாசியை அறியுமவர்கள் இங்கு ஸந்தேஹப்பட மாட்டார்கள்.) பஞ்ச

வர்ஷே என்பதற்கும் 'பஞ்சமவர்ஷே' என்பதற்கும் நெடுவாசியுண்டு. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் *விம்சத்யப்தே விச்ருத நாநாவித வித்ய:* என்று ஸ்வாமி அருளிச் செய்கிறார். விம்சத்யப்தே என்பதற்கு 'இருபதாவது வயதிலே' என்று பொருளன்று. மொத்தம் 20 வருஷகாலம் சிரமப்பட்டு என்பதே அங்கு அர்த்தம். அதுபோல் இங்கும் 4440 வருஷகாலம் சிரமப்பட்டுஒருவர் பாத்திரத் தனியனை இயற்றினர் என்று பொருளாகுமேயன்றி 4440-வது வருஷத்தில் இது பிறந்தது என்பதாகப் பொருள்பட வழியில்லை. பங்க்தி என்பது (தச) என்பதற்குப் பர்யாயம். அதை எப்படி பிரயோகிக்க வேணுமென்பதை உணராமல் வெகு சிரமப்பட்டு ச்லோகமியற்றி விட்டார். இதை ஒரு ஓலைச்சுவடியில் இவர்கள் காட்டமுடியாதென்பதை சபதமிட்டுரைத்தோம். இந்த சுலோகம் மாத்திரமே கல்பிதமென்கின்றோமல்லோம்; இந்த பாத்திரத் தனியன் இன்னவூ இன்னபீ இன்னாளில் அவதரித்ததென்று கூறுகிற வார்த்தை வசனநடையாகவும் ஒரு ஓலையேட்டில் காட்ட முடியாதென்பதையும் ஸத்தியமாகவும் திடமாகவும் கூறுவோம். அன்றியும், லக்கத்தைத் தெரிவிக்க வேண்டுமிடங்களில் * கடபயாதிஸம்ஜ்ஞரீதியில் சுலோகமியற்றுவதுதான் பிராசீனர்களின் வழக்கம். இங்ஙனே ஸங்க்யாவாசக சப்தத்தை நேரேயிட்டு இயற்றப்பட்ட சுலோகம் பாத்திரத்தனியன் போலவே பச்சாத் கல்பிதமென்பது எளிதாக நிர்ணயிக்கப்படும். ஒரு தனியன் பிறந்ததற்காக அந்தக் காலத்தைத் தெரிவிக்கவேண்டி கல்யப்தம் முதற்கொண்டு திதி வார நக்ஷத்ராதிகளையெல்லாம் தெரிவித்து ச்லோகம் இயற்றவேண்டிய அவசியம் என்ன? என்பதை விவேகிகள் விமர்சிப்பது.

ஸ்ரீமாந் வேங்கட தனியன் அவதரித்த காலத்தைப்பற்றி ஒரு ச்லோகமும் காணோம். அதை மாத்திரம் வசனமாகவே யெழுதி முடித்திருக்கிறார்களே. தேசிகனுடைய திருவவதாரத்தைப்பற்றி இங்ஙனே ஒரு சுலோகமுண்டோ? தேசிக சரித்ரபரமான எந்த புஸ்தகத்தையும் எடுத்துக் கொள்ளலாம். நாம் பல நூல்களையும் பரிசீலித்திருக்கிறோம். * பாத்ரபதமாஸகத விஷ்ணுவிமலர்க்ஷே * என்பது போலவேயுள்ள சுலோகங்களிலெல் "புரட்டாசித் திருவோணத்தில் திருவவதரித்தார்" என்றிவ்வளவே கிடைக்கின்றது. விபவ வருஷத்தில் என்பார் சிலரும், சுக்ல வருஷத்தில் என்பார் சிலருமாய் நாளைக்கும் போராடிக்கொண்டிருப்பது அபலபிக்கவொண்ணாதது. இதைப்பற்றின வாதப்போர் வேதாந்த தீபிகையிலே நிகழ்ந்துளது; நாமும் அதைப்பற்றி ஒரு க்ரந்தம் வடமொழியிலும் தென்மொழியிலும் ப்ரபவ வருஷத்தில் வெளியிட்டிருக்கிறோம். ஒன்றான தேசிகனுடைய அவதார காலநிர்ணயத்திற்கே ஒரு சுலோகம் கிடைக்காமலிருக்கும்போது சண்டைந் தனியனுடைய ஜநநத்திற்கு ஒரு ச்லோகம் காட்டப்படுமேயானால் புதியதைப்பழையதென்று காட்ட எவ்வளவோ பாடுபட்டிருக்கிறார்களென்பது தெரியவருகிறதன்றோ. தேசிகன் ஓரிரவில் ஒரு யாமத்தில் அத்யாச்சர்யமான பாதுகா ஸஹஸ்ரத்தை அருளிச் செய்தாரென்று சொல்லப்படுகிறது. இது அவதரித்தது எந்த வருஷத்தில் எந்த மாஸத்தில் எந்த நாளில் என்பதைப்பற்றி ஒருவரும் ஒருவரியும் எழுதிவைக்கவில்லை. பிறந்தநாள் முதலாக நீதி ஸ்தலங்கள் தோறும் பங்கப்பட்டு வருகிறவொரு தனியனுக்கு கல்யப்தம் முதற்கொண்டு எழுதி வைத்திருக்கிறார்களென்றால் இந்த வேலைத்திறம்

மிக மெச்சத்தக்கதன்றோ. ஆக இவ்வளவான நிரூபணங்களினால் பாத்ரத்தனியன் புராதனமன்று என்பதும், புராதனமென்று காட்டிக்கொள்ள மிகமிக ப்ரயாஸப்பட்டிருக்கிறார்களென்பதும் அத்தனையும் பழுதேயென்பதும் தேறிற்று. கண்ணழிவு சொல்லமுடியாத பலஹேதுக்களினால் இதனை இன்னமும் ஸ்தாபிப்போம்.

ஸம்ஸ்க்ருதக்ரந்தகாலக்ஷேபத்திற்கு ஸ்ரீமாந் வேங்கட தனியனும், திராவிட மணிப்ரவாள க்ரந்த காலக்ஷேபத்திற்கு பாத்திரத்தனியனுமாக ஸ்வாமி தேசிகனே வ்யவஸ்தைபண்ணி நியமித்தருளினார் என்று இவர்கள் எழுதியுள்ளார்கள். தேசிக திவ்யக்ரந்தங்கள் யாவும் ஓலையேடுகளில் நாலைக்கும் ஸம்ரக்ஷிக்கப்பட்டு வருகின்றன. திருமாளிகைகளிலும் மடங்களிலும் ஆங்காங்கு ஸுப்ரஸித்தங்களான (கன்னிமாரா லைப்ரெரி முதலிய) ராஜகீய புஸ்தகாலயங்களிலும் ப்ராசீந தாளகோசங்கள் பாங்காகப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. 10, 15 இடங்களில் இதம்பரமாக நாம் சென்று உண்மை தெரிந்துகொள்ளப் பரிசீலித்திருக்கிறோம். தேசிகனுடைய நூல்கள் எல்லாவற்றிலும் ஸ்ரீமாந் வேங்கடதனியன் ஒன்றே திகழ்கின்றது. பாத்திரத் தனியன் ஒன்றிலாவது காணக் கிடைக்குமோ என்று பெருமுயற்சிகள் செய்து பார்த்தும் ஒன்றிலும் கிடைக்கவில்லை. கிடைக்கின்றதென்று கண்டு காண்பிக்கவல்ல மஹான்கள் உளரேல் தாராளமாக முன்வரலாம். [இத்தனியன் ஓலை ஸ்ரீகோசங்களில் காணப்படவில்லையென்று ப்ராமாணிகரான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்யர் ஸாதித்தார். மேலும், ஓலை ஸ்ரீகோசங்கள் வரையில் போகவேண்டிய அவசியமுமில்லை. கோவில் விவாதங்களில் ஸம்பந்தப்படாதவர்களும் ஸாதுக்களுமான பெரியார்கள் அச்சிடுவித்திருக்கின்ற தேசிக ரஹஸ்ய-வ்யாக்யாநாதி க்ரந்தங்களையெடுத்துப் பார்ப்போம். அவற்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் தவிர இந்த பாத்திரத் தனியன் தலைகாட்டவில்லையே. ஸந்நிதி விவாதங்களில் கைதேறின ஆக்ரஹிகளான பிற்காலத்தவர்கள் அச்சிடுவித்துவரும் தேசிக க்ரந்தங்களில் இந்த பாத்திரத் தனியனையும் நுழைத்துப் பதிப்பித்து வருகிறார்களென்பது உள்ளது. தேசிகக்ரந்தங்களில் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் மிகவும் முக்கியமென்பது நிர்விவாதம். அதற்கு ஸாராஸ்வாதினீவியாக்யானம் ப்ரதாநதமம் என்பதும் பிரஸித்தம். அந்த வியாக்யானத்தின் தொடக்கத்தில் அந்த வ்யாக்யாதாவின் கையினால் எழுதியிருக்கும் தனியன் ஸ்ரீமாந் வேங்கட தனியனா? பாத்திரத் தனியனா? என்று [திருச்சேறைப் பதிப்பில்] பார்க்கலாம். ஸ்வாமி தேசிகனே ஏதோ தனியன் வ்யவஸ்தை பண்ணினார் என்கிறார்களே: இது ஸாராஸ்வாதினீகாரர்க்குத் தெரிந்திருக்கவில்லைபோலும்.

இப்போதிப்போது சிலர் சொல்லியும் எழுதியும் வருவதென்னவென்றால், தேசிக ரஹஸ்யங்கள் தமிழாயிருந்தாலும் அவற்றுக்கு ஸ்ரீமாந் வேங்கடதனியன் தவிர, பாத்திரத்தனியன் கிடையாது: திவ்யப்பிரபந்தங்களுக்கு மட்டுமே பாத்திரத் தனியன் ஏற்பட்டது என்கிறார்கள். இப்படியொரு வ்யவஸ்தை உண்மையாயிருந்தால், தேசிக ரஹஸ்யங்களிலும் பாத்திரத்தனியனைப் பலர் சேர்த்து அச்சிட்டிருப்பது இந்த ச்லோகத்திற்கு ஒரு பெருமையை ஏறிடுவதற்கான அதர்க்கணைச் செயல் என்று வெளியிட்டு ஸயூத்யர்களை இவர்கள் கண்டிக்க வேண்டும். [முக்கியமான வார்த்தை:] மிக மிக ஆசைப்பட்டுப் பண்ணின பாத்திரத் தனியன் தேசிக திவ்யஸூக்திகளுக்கு உபயோகப்படாமல் போவது சோசநீயமே. இதெல்லாம் வீணான குஸ்ருஷ்டியே. "வம்பு வீண் சச்சரவுகளும் சண்டைகளும் ஏற்படுமிடங்களுக்குத்தான் பாத்திரத்தனியனை வைத்துக்கொள்ள வேண்டியது" என்று

தேசிகனே வ்யவஸ்தை செய்தருளினர் என்று ஒரே வார்த்தையாக முடிக்கலா மிவர்கள்.

மணவாளமாமுனிகளின் எந்த க்ரந்தங்களையும் எடுத்துப்பார்க்கலாம்; தாள ஸ்ரீ கோசங்களோடு அச்சுப்புத்தகங்களோடு வாசியற எல்லாவற்றிலும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன்தான் இருந்து தீரும். ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுக்கு இங்ஙனே ஒரு ப்ராமாண்யம் லவலேசமாகிலும் காட்டக் கூடுமாவென்று கேட்கி ரோம். அச்சுக்கூடங்களோடு கூடவே இத்தனியன் ஏற்பட்டதென்பதற்கு, அசைக்கமுடியாத நிருபகங்கள் கிடைக்கும். இந்தத் தனியன் ஏறிய ஓலையேடு ஒன்றுகூட ஒருவரால் காட்ட முடியாதென்று துணிந்து கூறுகின்ற நாம் இவ் விஷயத்தில் எவ்வளவு பாடுபட்டு உண்மையைக் கண்டுபிடித்திருப்போமென் பதை அவரவர்கள் உள்ளத்துள்ளே ஊன்றியுணரலாம்

"ராமாநுஜ தயாபாத்ர தனியன் திகழ்கின்ற ஓலை ஸ்ரீகோசம் இதோவுள் ளது, காணும்" என்று கம்பீரமாக கோஷித்து ஒரு ஸ்ரீகோசத்தையாவது ஸதஸ் ஸில் காட்ட நேருமா? அப்படி ஒருவர் காட்டிவிடுவரேல்,... ......... .....என்று நாம் பல பத்திரிகைகளை யச்சிட்டுப் பிரசுரம் செய்தும் ஒருவரும் எடுத்துக்காட்ட முன்வரவில்லை. இல்லாததை எங்ஙனே யெடுத்துக்காட்ட முடியும்?

இங்ஙனம் நாம் துணிவுடன் எழுதுவதைக் காணும் சில மஹான்கள் என்ன நினைக்கக் கூடுமென்றால், "உண்மையில் இந்த பாத்திரத் தனியன் ஏற்பட்டு 60) வருஷம் ஆகாவிடினும், சில ஸந்நிதிகளில் சேர்ந்துள்ள விவாதங்களை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் இந்தத்தனியன் ஏற்பட்டு ஏறக்குறைய இருநூறு வருஷமாவது அவசியம் ஆயிருக்குமென்று எண்ணவேண்டியதாகுமே. வாஸ்தவத்தில் கி. பி. பதினெட்டாவது நூற்றுண்டின் முற்பகுதியில் இத்தனியன் ஜனித்ததாகவும் தெரியவருகிறது. அத்தருணத்திற்குப் பின்பு பலபல ஓலை ஸ்ரீகோசங்கள் ஏறியரு ளப் பண்ணப்பட்டிருக்கலாமே; அவற்றில் ஏதாவதொரு ஸ்ரீகோசத்தில் இந்த பாத் ரத் தனியன் சேர்த்து எழுதப்பட்டிருக்கவும் கூடுமே : அப்படிப்பட்ட வொரு சுவடியைக் கொணர்ந்து காட்டிவிடமுடியாதா?" என்று நினைக்கக் கூடும்.

ஆரியர்காள்! ஓலை ஸ்ரீகோசங்களை ஆராய்ச்சி செய்வதற்காக நாம் அடிக்கடி பலதலங்களுக்குச் செல்வதுண்டு. நம்முடைய க்ரந்தங்களையெல்லாம் ஊன்றி நோக்குமவர்கள் இத்தகைய பரிச்ரமம் நமக்கு நெடுநாளாக வுண்டென்பதை நன்கறிவார்கள். அங்ஙனம் செல்லுமிடங்களில் இந்த ராமாநுஜதயாபாத்ரத் தனி யன் விஷயமான ஆராய்ச்சியையும் நாம் செய்வது வழக்கம். ஏனென்றால், (1) சில திவ்யதேசங்களில் இத்தனியன் ஸம்பந்தமான சச்சரவே அதிகரித்திருப்பதா லும், (2) இத்தனியனைச் சிலவிடங்களில் வாயால் சொன்னதற்கும் சொல்ல நினைத்த தற்கும் ராஜதண்டனைகள் ஏற்பட்டிருப்பதாலும், (3) இத்தனியனில் பற்றுவைத் தது காரணமாகவே ஸ்ரீ தாதாசார்ய வம்சஸ்தர்கள் பல திவ்யதேசங்களில் தங்க ளுடைய சிறந்த மரியாதைகளை அநியாயமாய் இழக்க நேர்ந்துவிட்டதென்று ஸ்ரீபெரும்பூதூர் வியவஹாரத்தில் கனம் ஹைகோர்ட்டு ஜட்ஜ்கள் தெரிந்து பரிதா பத்தோடு எழுதியிருக்கிறபடியாலும், (4) காஞ்சீபுரத்தில் மஹாவ்யாபகராகவும் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாகவும் எழுந்தருளியிருந்த திருப் புட்குழி ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான உ. வே. ஸ்ரீ க்ருஷ்ணதாதாசார்யர் ஸ்வாமி 1874ளுத்தில் செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டு 72-ஐ. தாவாவில் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் பிரதிவாதியாக எழுந்தருளி "விளக்

கொளி தேசிகன் ஸந்நிதிவாசலில் தென்கலைத் திருமண்தான் இருந்தது" என்றும், 6, 7 மாதங்களுக்குமுன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதை இடித்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன் என்றும், "அந்த தேசிகன் ஸந்நிதியிலுங் கூடத் தென்கலையார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்ய ப்ரபந்த ஸேவைசெய்து வருகிறார்கள்" என்றும் *19-9-1874ல்* ஸ்டேட்மெண்டு கொடுத்திருப்பது அப்படியே அச்சாகி வெளிவந்திருப்பதாலும் மற்றும் பல காரணங்களாலும் இத்தனியனைப்பற்றியும் திருமண்காப்பைப்பற்றியும் உண்மையைக் கண்டுபிடிக்க வேணுமென்று அடியேனுக்கு நெடுநாளாகவே ஆவல் இருந்ததால் பல ஆராய்ச்சிகள் செய்யலாயின. விவாத பாத்ரத்தனியன் ஏறியுள்ள ஓலை ஸ்ரீகோசம் ஓரிடத்திலாவது கிடைக்குமா என்று மிக அலைந்துபார்த்தும் ஓரிடத்திலும் ஒன்றுகூட அடியேனுக்குப் புலப்படவில்லை.

மைஸூரிலுள்ள ஸ்ரீ பரகால மடத்திற்கே சென்றிருந்தேன். மஹாகவிவராக எழுந்தருளியிருந்த ஹொஸதுர்க்கம்ஸ்வாமி அடியேன்பால் பரமக்ருபாநுசென்ற இலகளுத்தில் அங்குஸமாகமம் நேர்ந்தபோது அந்த மடத்திலுள்ள ஓலை ஸ்ரீ கோசங்களை யெல்லாம் அவிழ்த்து ஸேவிக்க ஸ்வாமிப்யமநும் பெற்றுக்கொண்டேன். தேசிக க்ரந்தங்கள் பலவும் எடுத்து ஸேவித்தேன். ஒவ்வொன்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் உள்ளதேயன்றி பாத்ரத் தனியன் ஒன்றிலும் புலப்படவில்லை. ஆனதுபற்றியே நாம் இதனை கண்டு நிஸ்ஸங்கோசமாக எழுதலானோம். இவ்விஷயத்தை அப்போதே நாம் ப்ரபஞ்சனம் செய்தோம். அதற்குப் பிறகு யாரேனுமொருவர், விழித்துக்கொண்டு ஓலைஏட்டிலும் இந்தத்தனியனை எற்றி வைக்க வேணுமென விரும்பி ஏதாவது வேலைத்திறங்கள் செய்திருக்கலாமோ என்று நமக்கு ஒரு சங்கையுமுண்டு. ஆனாலும் நமக்குக் கவலையில்லை. ஸர்ப்ரஸித்த ராஜகீய புஸ்தகாலயங்களில் சென்று விபர்யாஸம் விளைக்க முடியாதே.

*திருவெவ்வுளூர் முதலான சிலசில திவ்யதேசங்களில் இந்தத் தனியனுக்குச் சிலகாலமாய் ப்ரவேசமிருப்பது கொண்டும் உண்மையை மாற்றவொண்ணாது. இங்ஙனே சில திவ்ய தேசங்களை ஸ்தலவாஸிகள் பறிகொடுத்துவிட்டாலும் அவ்விடங்களில் இடையில் ஸம்பவித்த கோளாறுகளையும் புராதநஸ்திதியையும் உள்ளபடி காட்டவல்ல ரிகார்டுகள் அழிந்து போகவில்லை. திருவெவ்வுளூரில் ரிகார்டுகள் நீதிமன்றத்து விவாதத்தில் வெற்றிபெறவிக்கவில்லை யானாலும் அதைப்பற்றி நமக்கு விசாரமில்லை. ப்ராசீனஸ்திதியைத் தெரிவிக்கின்ற ரிகார்டுகளன்றோ அவை. மாமூலாகச் சொல்லிவந்த ஸ்ரீசைலேசத்தனியனை விட்டுப் புதிய ராமாநுஜ பாத்ரத் தனியனை அஹோபிலம் ஜீயர்ஸ்வாமிகள் சொன்னதற்காக எத்தனை தடவை அவர் ஸந்நிதி கைங்கர்யத்திலிருந்து விலக்கப்பட்டார்? புதுத்தனியனை இனிச் சொல்லுவதில்லை என்று ஜீயரே எத்தனை தடவை எழுதிக் கொடுத்தார் என்பதெல்லாம் மறைக்கக் கூடியவையல்லவே.*

*மணவாளமாமுனிகளைக் காட்டிலும் வேதாந்ததேசிகன் முற்பட்டவராதலால், மாமுனிகளின் தனியனான ஸ்ரீசைலேச தயாபாத்ரத்திற்காட்டிலும் தேசிகனுடைய தனியனே முற்பட்டிருக்கத் தகுந்தது—என்று பொதுவாக அனைவரும் எண்ணக்கூடியது. இதில் நாமும் விப்ரதிபத்தி யுடையோமல்லோம். மாமுனிகளின் தனியனைக்காட்டிலும் தேசிகன் தனியனே முற்பட்டது என்பது மிகவும்*

யுக்தம். அந்தத்தனியன் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்பதே யல்லது 'ராமா நுஜதயாபாத்ரம்' என்பதல்ல—என்று விசதமாக நிரூபித்தாயிற்று.

ஆனால் 'ராமாநுஜதயாபாத்ரம்' எப்போது பிறந்தது? எங்ஙனம் ப்ரசார மடையத் தொடங்கிற்று? என்னும் விஷயங்கள் விமர்சிக்கப்பட வேண்டும். அருளிச் செயல்களை அநுஸந்திக்கத் தொடங்கும்போதுகளில் உபகாரஸ்ம்ருதி யாக ஆசார்யர்களின் தனியன்கள் அநுஸந்திக்க ப்ராப்தமானால் அவர்களுள் முற்பட்டவர்கள் யாவரோ அவர்களுடைய தனியன்களை அந்த வரிசைக் கிரம மாக அநுஸந்திப்பது முறைமையாகும். இங்ஙனே யாமிடத்து ஸ்ரீமந் நாத முனிகள் போல்வாரான பூர்வாசார்யர்களுடைய தனியன் முதன்மை பெற வேண்டும். *சடகோப தயாபாத்ரம் ஜ்ஞானவைராக்ய சேவதிம், அகாதபகவத் பக்திம் வந்தே நாதமுனிம் குரும்* என்று ஒருதனியன் இருந்து திவ்யப்ரபந்தாரம் பங்களில் அநுஸந்திக்கப்பட்டு வந்திருக்குமாகில் நன்றே. ஆனால் அங்ஙனம் வந்திருக்கவில்லை. உடையவர் காலம் வரையில் அந்தந்த ஆழ்வார்களுடைய தனி யன்கள் அநுஸந்திக்கப்பட்டு வந்தன. பிறகு கூரத்தாழ்வான் காலத்தில் *லக்ஷ்மீ நாதஸமாரம்பாம்* *யோ நித்யமச்யுத*மாதாபிதாயுவதய:* என்கிற தனியன்கள் ஸகலப்ரபந்தங்களுக்கும் பொதுத் தனியன்களாக அநுஸந்திக்கப்படுமாறு ஸங்கே தம் ஏற்பட்டது. பட்டர் காலத்தில் *பூதம்ஸரச்ச மஹதாஹ்வய* என்கிற தனி யனும் அவற்றோடு சேர்க்கப்பட்டது. இவை திவ்யப்ரபந்தாநுஸந்தான ஆரம்பத் திற்கு மாத்திரமே ஏற்பட்டன. அநுஸந்தான முடிவில் ஒரு தனியனுமில்லை. வாழித் திருநாமமுமில்லை. முடிவில் பல்லாண்டு பல்லாண்டு என்று தொடங்கி 'அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே' என்று முடிப்பதுவே வழக்கமாயிருந்தது.

பிறகு மணவாள மாமுனிகளின் காலத்தில் ஏற்பட்ட விஷயங்கள் ஜகத் ப்ரஸித்தமானவை. அவை மாமுனிகளின் காலத்திலேயே அவருடைய சிஷ்யர் களால் சம்பூருபமும் காவ்யருபமும் ஸ்தோத்ரருபமுமான க்ரந்தங்களில் வட மொழியிலும் தென்மொழியிலும் அமைக்கப்பட்டு விளங்குகின்றன. அவை புராதன ஓலை ஸ்ரீகோசங்களாக அனேகம் கிடைக்கின்றன. அவை எழுதப்பட்டு எத்தனை நூற்றாண்டுகள் ஆகியிருக்குமென்பதையும் தடஸ்தர்கள் ஊன்றிப் பார்க்கலாம். மாமுனிகளின் திருவடிகளில் ஒருவரான அப்பிள்ளையருளிச்செய்த நாள்பாட்டு வாழித்திருநாமத்தில் "இப்புவியிலரங்கேசற்கு ஈடளித்தான் வாழியே" என்றும் "எப்புவியும் சீசைல மேத்தவந்தோன் வாழியே" என்றும் அமைக்கப்பட்டு நித்யாநுஸந்தானமாக வந்திருக்கிறது. இவ்விஷயங்களெல்லாம் 400 வருஷங்களுக்கு முற்பட்டவையாக மதிக்கக்கூடிய ஓலை ஸ்ரீகோசங்களில் பல ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகளிலும் மடங்களிலும் ராஜகீய புஸ்தகால யங்களிலும் காணக்கிடைக்கின்றன. இப்படியிரா? ஸ்ரீதேசிகனுடைய திருவவ தார ஸ்தலமுட்பட ஸகல ஸந்நிதிகளிலும் ஸகல திவ்ய தேசங்களிலும் தொன்று தொட்டு ஏகருபமாக நடைபெற்றுவருகின்ற ஆசாரம் அபலபிக்க முடியாதது. அத்தலங்களிலெல்லாம் ராமாநுஜதயாபாத்ரமும் அதைச் சேர்ந்த வாழித்திரு நாமம் முதலியவைகளுமே அநுஸந்தானத்தில் இருந்துவந்தனவென்றும், இடையில் எப்போதோ மாறிவிட்டனவென்றும் இனி இவர்கள் சொல்லத் துணியவேண்டும். எதுவும் சொல்லிவிடலாம்;  வேணுமே. ஔசித்யமும் காண

வேணுமே. பாத்திரத்தனியன் சண்டை புகுந்தவிடங்களில் "நூதனமாக இந்தப் பாத்திரம் தொடங்கினார்கள்" என்கிற ஹாஹாகாரமும் அதன்மேல் விசாரணைகளும் ராஜதண்டனைகளும் ஸப்ராவித்தமல்லவா? ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நூதனமாகச் சொல்லத் தொடங்கினார்களென்று ஒருதலத்திலாவது ஒருபேச்சாகிலும் கிளம்பினதுண்டோ? ஆக்ரமித்தல், இழத்தல் என்று இரண்டு உண்டு; ஆக்ரமிப்பவர்கள் இன்னார்? இழப்பவர்கள் இன்னார்? என்பதை உலகமறியும்.

1874-ஆம் வருஷத்தில் குருல்துறை முன்னிலையில் நடந்த விவாதமென்று கீழே நாம் எடுத்துக்காட்டினதில் திருப்புட்குழி ஸ்வாமியின் ஸாக்ஷியத்தில் தேசிகனுடைய திருவவதாரஸ்தல ஸன்னிதியில் தென்கலைத் திருமணும் தென்கலைத் தனியனுந்தான் புராதனமாகவுள்ளதென்று அந்த மஹான் (ஸாக்ஷியம்) சொன்னபோது அதிகாரி கேள்வி கேட்டிருக்கிறார்—வடகலை குருவாக நீங்கள் சொல்லுகிற தேசிகருடைய ஆலயத்தில் தென்கலைத் திருமணும் தென்கலைத் தனியனும் எக்காலத்தில் எவ்விதமாக வந்து புகுந்தது? என்று கேள்வி கேட்டிருக்கிறார். அதற்கு வடகலையார்கள் கூறின பதிலும் அதன்மேல் அதிகாரியின் சிரிப்பும் மேலே ரிகார்டுகளினால் வெளிவரும்.

மருமமறியாத சிலர்—"தேசிகனுக்கு திவ்யப்ரபந்தங்களில் ஈடுபாடு இல்லையா? அவற்றை இவர் காப்பாற்றவில்லையா? வளர்க்கவில்லையா? அவற்றுக்காக இவர் எவ்வளவோ பாடுபட்டிருக்கவில்லையா? இவருடைய தனியனில் எதற்காக விப்ரதிபத்திகொள்ளவேணும்" என்று வாதிக்கிறார்கள். கேண்மின்; நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் திருவாய்மொழிப்பிள்ளை முதலான ஆசார்யர்களுக்கும் இந்தப் பெருமைகள் பெரும்பாலும் இருந்தாலும் அன்னவர்களில் ஒருவருடைய தனியனும் இத்தகைய கௌரவம் பெறவில்லையென்பது யாவரும் இசைந்த விஷயம். விலக்ஷணமானவொரு பகவத்ஸங்கல்ப விசேஷத்தினால் ஒரு ஆசார்யருடைய தனியனுக்கும் வாழித் திருநாமத்திற்குமே இத்தகைய பெருமை ஏற்பட்டது. அந்த ஆசார்யர் மணவாளமாமுனிகள் ஒருவரேயன்றி மற்றொருவரல்லர் என்னுமிடம் அசைக்கவொண்ணாதது.

ராமாநுஜதயாபாத்ரம் தேசிகன் காலத்திலேயே அவதரித்து அப்போதே ஸந்நிதிகளிலும் க்ருஹாதிகளிலும் ப்ரசாரமும் பெற்று மேன்மையடைந்திருக்குமாகில் அந்த அநுஸந்தான பரம்பரை இடையறாமல் வந்தேயிருக்கும். ஓரிடத்திலும் விச்சேதமடையக் காரணமில்லை. அப்போது ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸந்நிதிகளில் ஆதரித்துப் பரிக்ரஹித்தேயிருப்பர்கள்; அந்த ரீதி மாறுபாடடையக் காரணமேகிடையாது. தேசிகனிடத்தில் பகையும் பொறாமையும் கொண்டவர்கள் அக்காலத்திலுமிருந்தார்களென்று சொல்லி அதனால் வேறுபாடு உண்டானதாகச் சொல்லித் தீரவேண்டுமிவர்கள். உண்மை அப்படி இருக்குமானால் அந்த ஸமயத்திலேயே பிள்ளை லோகாசார்யர் விஷயமான தனியன் வாழி திருநாமங்கள் அதற்குப் போட்டியாக ஏற்பட்டிருக்கும். 70, 80 வருஷங்கள் பொறுத்து மணவாள மாமுனிகளின் தனியனும் வாழித்திருநாமமும் போட்டியாக வந்து புகுமாட்டாதென்பது திண்ணம். கலியுகம் 4440ல் ராமாநுஜதயாபாத்ரம் ஜனித்து அப்போதே ஸந்நிதிகளிலும் ப்ரசாரம் அடைந்திருந்ததாகவே வைத்துக்

கொள்வோம். அப்போது அந்தத் தனியன் முதலியவற்றை ஸந்நிதிகளில் ஓதி வந்த அத்யாபகர்கள் யாவர்? அவர்களுடைய பரம்பரை இப்போது இருக்கின்றதா இல்லையா? என்று விமர்சிக்கவேண்டும். இவ்வாராய்ச்சிகளையெல்லாம் நாம் செவ்வனே செய்து பலபல உண்மைகளை உலகமுகக்க வெளியிட வல்லோம். ஒன்றையும் விடாது எல்லாவற்றையும் வெளியிட்டிருக்கிறோம். இதைப்பற்றி நம்முடைய வெளியீடுகளெல்லாம் உலகம் பாவியவையே.

பங்க்தியில் சேரத் தகாதவனென்று ஒதுக்கப் பட்டிருந்த வொருத்தியைப் பங்க்தியில் சேர்த்துக்கொள்ள விரும்புமவர்கள் அவளைத் ததீயாராதன கோஷ்டிகளில் நெய்யும் உப்பும் தயிரும் மோரும் பரிமாறுவதற்கு நியமித்தல், அது ஸாத்மித்தவாறே அப்பளம் வடாம் லட்டு வடை பரிமாற நியமித்தல் செய்வர்களாம். "இவை பரிமாறுவதற்குப் பலஸாத்விகள் இருக்கிறார்களே, இவளிருக்கவேண்டுமிடத்தில் இருக்கட்டுமே" என்று மருமமறிந்த சில பெரியார் பகர்ந்தால் பிடிவாதமாக அவளைக் கொண்டுதளிகையே செய்விக்கத் துணிவர்களாம். இத்தகைய கதைகள் நினைவுக்கு வரும்படியன்றோ இவர்கள் ஆசரித்துவருவது. 'இந்த ச்லோகம் ஸந்நிதிகளில் பட்டபாடு என்ன?' என்பதைச் சிறிதும் ஆலோசியாமல் இதற்கொரு விழவுநடத்த ஆசைகொண்டதே ஆச்சரியமல்லவா? "என்றேனிருக்க மனைநீராட்டி" என்று நம்மாழ்வாரும், "பெற்ற தாயிருக்க மனைவெந்நீராட்டுதிரோ மாட்டாத தகவற்றீரே" என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்த கதைபோலல்லவா காண்கிறது. நிற்க.

> இனிமேல் எழுதப்படும் முப்பது வாக்கியச்ரேணிகளால் தத்துவப் பொருள்கள் யாவும் கையிலங்கு நெல்லிக்கனியாக விளங்கும். இந்நூலைப் பூர்த்தியாக வாசிக்க அவகாசமில்லாதவர்கள் இப்பகுதியை மட்டும் வாசித்தாலும் போதும்.

1. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீபாஷ்யகாரர்க்கு முன்பு இருந்த ஆசாரியர்கள் ஸ்ரீமந் நாதமுனிகளும் உய்யக்கொண்டாரும் மணக்கால் நம்பியும் ஆளவந்தாரும், ஆளவந்தாருடைய திருவடிகளாய் எம்பெருமானார்க்கு ஆசாரியர்களான ஐவரும், திருக்கச்சி நம்பிகளும் ஆகப் பதின்மரேயாவர். தேசிகன் குரு பரம்பராஸாரத்தில் மற்றும் பலபல ஆசாரியர்களின் திருநாமங்களையும் நிர்தேசத்திருந்தாலும் அவர்களிருக்கட்டும். எம்பெருமானார்க்குப் பிற்பட்ட ஆசாரியர்கள் அபரிமிதர்களாகவுள்ளார்கள். அவர்களைப்பற்றி தேசிகன் குரு பரம்பராஸாரத்தில் "எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலாச்ரயித்த முதலிகளைத் தந்தாம் ஸம்ப்ரதாயப்படிகளிலே யறிந்துகொள்வது" என்று ஒரே வரியில் முடித்தருளினார். க்ரந்தங்களையருளிச்செய்து உபகாரகர்களான ஆசாரியர்களை யாவரும் தெரிந்துகொண்டிருக்கிறோம். அவ்வாசாரியர்களிடத்தில் ஸ்ரீவைஷ்ணவ குலத்திற் பிறந்த யாவரும் விப்ரதிபத்திலேசமுமின்றிக்கே ஸம்ப்ரதிபத்தி கொண்டிருக்க ப்ராப்தம்.

2. தென்கலை வகுப்பினரான நாம் ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு — தத்புத்ரரத்ந பர்யந்தர்களான ஆசார்யர்களில் எந்த ஆசாரியரிடத்திலும் ஈஷத்தும் விப்ரதிபத்தி கொண்டிருக்கவில்லை. பூர்வாசார்ய பரம்பரையில் அவஸானஸ்தானத்தில்

நிற்பவர் மணவாளமாமுனிகள். அவர் தாம் செய்தருளின வியாக்கியான நூல்களிலே கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைப்போலவே எங்களாழ்வான், நடாதூரம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர், நிகமாந்த மஹாகுரு ஆகிய இவ்வாசிரியர்களின் ஸ்ரீஸூக்திகளையும் ப்ரமாணமாகக் காட்டியருளுகிறார். குமாரவரதாசார்யரான நயனராசார்யருடைய ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்டியுள்ளார். "இச்சயா யதுபாதேயம் டஸ்யாநிசய ஸித்தயே, உபாயா நுபயை கைகஜுஷா தென சேஷசேஷிணௌ." என்று தத்வத்ரய வியாக்கியானத்தில் (40ல்) உதாஹரித்தருளியுள்ள காரிகை நயனராசார்யருடையதென்கிறார்கள். அன்றெனில் இதை விட்டிடுதும். தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்தும் தத்வமுக்தாகலாபத்திலிருந்தும் ந்யாஸவிம்சதியிலிருந்தும் வாக்யராசிகளையும் சுலோகங்களையும் மாமுனிகள் மேற்கோள் கொடுத்திருப்பது ப்ரஸித்தம். வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரும் தம்முடைய தத்வதீபாதிகளில் தேசிகனுடைய பலபல ஸூக்திகளை உதாஹரித்து அர்த்த விவரணமும் செய்திருக்கிறார். அந்தச் சீயர்க்கு இருநூறு வருடங்கள் பிற்பட்டவராய் அந்தத் திருநாமமே உடையராய் ஸ்ரீகாஞ்சீ கீழ் கோபுரவாசலிலுள்ள மடத்திற்குத் தலைவரான ஸ்வாமி அருளிச்செய்ததாய் பகவத் விஷய ஸ்ரீகோசங்களில் அச்சிடப்பட்டதாயுமுள்ள "வேதாந்த சாஸ்த்ர த்ரவிடாகமாத்ய தசக த்வந்த் வைககண்ட்யம்" என்னும் மஹத்தான க்ரந்தத்தில் ஆசார்ய வந்தனமாகச் செய்துள்ள சுலோகங்களில் நான்காவது சுலோகம் 'ஸ்ரீவத்ஸ சிஹ்ந தநுஜாகமமௌளி போகி ஸ்ரீமத்கலிக்ந வரயோகி முகா மஹாந்த:, வ்யாஸார்ய வேத சிகரார்ய மஹார்யமுக்யா வேதாந்த யுக்மகுரவோ ஹ்ருதி ஸந்நிதத்யு:" என்பது. இதில் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை மணவாளமாமுனிகள் ச்ருதப்ரகாசிகா பட்டர் வேதாந்த மஹாகுரு தொட்டயாசார்யர் ஆகிய இவ்வாசாரியர்களைச் சிந்தனை செய்திருக்கிறார்.

3. சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வித்வான்களில் நிகரற்ற வித்வானும் வேதாந்த வாதாவளீ ந்யாயபாஸ்கராத்யநேக க்ரந்தப்ரணேதாவுமான மைஸூர் (மண்டயம்) அனந்தாழ்வான் தம்முடைய க்ரந்தங்களில் தேசிகனுடைய அனேக ஸூக்திகளை ஆங்காங்கு உதாஹரித்திருக்கிறாரென்பதும், நிகழும் நூற்றாண்டிலும் காஞ்சீபுரியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌமராக விளங்கின குன்றபாக்கம் ஸ்வாமி தாம் பணித்த தத்வரத்நாவளியில் "ஜயதி பகவாந் வேதாந்தார்யஸ் ஸ தார்க்கிக கேஸரீ" என்று பணித்திருக்கிறாரென்பதும் இங்ஙனே மற்றும் பலவும் குறிக்கொள்ளத்தக்க விஷயம்.

4. இவ்வாறாக தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்டவர்களும் அவரை உபச்லோகித்தவர்களும் தென்னாசார்ய பரம்பரையிலே தேறுகிறாப்போலே மற்றொரு பரம்பரையில் தொடர்ச்சியாகத் தேறக்கூடுமோ? திருக்குடந்தை கோபால தேசிகன் என்றொரு மஹநீயர் ஜனித்து அவரிடத்திலே யதிகள் மூவர் ஆச்ரயித்து முநித்ரய ஸம்ப்ரதாயமென்று ஒன்று ஏற்பட்ட பிறகு தேசிகனைத் தெரிந்து கொண்டவர்களும் அவரை உபச்லோகிப்பவர்களும் பலருளரென்பதில் நமக்கு விவாதமில்லை. இதை நாம் நமது பரச்சத க்ரந்தங்களில் எழுதியேயுள்ளோம். இந்த கோபால தேசிகாதிகளை விட்டிட்டு இவர்களுக்கு முன்னே எதிர்த்தலையில் தேசிகனென்று வாய் திறந்த ஒரு வ்யக்தியாவது உண்டா? உண்டானால் இன்னாரென்று எடுத்துக் காட்டுமின் என்று கூசாமல் கூறுதும்.

5. நம்மாழ்வார் எம்பெருமானுடைய பரத்துவத்தை உபபாதித்தருளின போது பிறருடைய அகமும் முகமும் கறுத்துவிட்டதாம். அதைக் கண்ட

ஆழ்வார் "நான் உண்மையைச் சொன்னால் நீங்கள் கிலேசங் கொள்வதேன்?" என்று கேட்பவர்போல் "கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ணனல்லால் தெய்வமில்லை" (திருவாய்மொழி 5-2-7) என்று துணிந்தருளிச் செய்தார். அது போல நாமும் துணிந்து கூறுகின்றோம்; என்ன கூறுகின்றோம்; மறுமுறையும் கூறுகின்றோம் கேண்மின்: வாதிகேஸரி ஜீயர் போலவும் மணவாளமாமுனிகள் போலவும் தொட்டயாசாரியர்போலவும் அவருடைய அந்தேவாஸியான ந்ருஸிம்ஹ ராஜர் போலவும் காஞ்சி மடாதிபதி யழகிய மணவாளச் சீயர் போலவும் புராதன ரென்று மதிக்கக்கூடிய ஒரு வடகலைப் பெரியாராவது தேசிகனைப் புகழ்ந்தவருள ரேல் (இம்பஹுனா?) தேசிக ப்ரஸ்தாவமும் பகவத்ராமாநுஜாதிப்ரஸ்தாவமும் செய்தவருளரேல் அவரை இன்னாரென்று எடுத்துக் கூறுமின்.

6. "இப்படி கேட்கிறானேயிவன்!" என்று கோபமும் தாபமும் மேலிட்டு நம்மைக் கறுக்கச் சிவக்கப் பார்க்கலாம்; துர்யோதநாதிகள் கண்ண பிரான் திறத்தில் ஏதேதோ சூழ்ச்சிகள் செய்தது போலவும் செய்யலாம்: இத்தனை போக்கி, நம்முடைய இக்கேள்விக்கு ஆர்ஜவத்துடன் விடையிறுப்பாருளரோ? இல்லை, இல்லை, இல்லை என்பதில் ஸந்தேஹமேது? "இரவில் ஸூர்ய ப்ரகாச முண்டோ? பகலில் சந்த்ர ப்ரகாச முண்டோ?" என்று கேட்டால் உண்டு என்று வாய் திறக்க எப்படி வழியில்லையோ, அப்படியே இரண்டு நூற்றாண்டுகட்கு முன்பு தேசிகனைப் போற்றினவர்களும் தேசிக ப்ரஸ்தாவம் செய்தவர்களுமான வடகலைப் பெரியார் இருந்தார்களென்று வாய் திறக்கவும் வழியில்லை. இருந்தால், இன்னாரின்னாரிருந்தார்கள்; இன்னின்ன வடமொழி தென்மொழி நூல்களை அவர்கள் இயற்றியிருக்கிறார்கள்' என்று இவ்வளவே காட்டிவிட்டால் போதுமே. எதிர் வகுப்பினர் இதைப்பற்றி வீணான நிந்தாத்பாயங்களை வளர்க்கமுடியுமே யல்லது வேறொன்றும் செய்யமுடியாதென்பதை சிலாசாஸனமாகவன்றோ எழுதி வைத்திருக்கிறோம் நாம்.

7. இவர்களை நவீனர்களென்று நாம் வ்யபதேசித்து வருவதன் பொருத் தத்தை இவ்வளவால் விளக்கினோமாயிற்று. தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்கள் மட்டும் இடையறாது அநுஸ்யூதர்களாக வந்துகொண்டிருக்கிறார்களோவென்று ஸஹஸா ப்ரதிப்ரச்நம் செய்துவிடலாமிவர்கள். ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்திலும் மற்றும் பல தேவஸ்தானங்களிலும் எம்பெருமானார் காலத்திலிருந்து நியதமான மரியாதைகளை அநுபவித்து வருபவர்களும், மணவாள மாமுனிகள் நியமித்தருளின அஷ்டதிக்க ஜாசார்ய பரம்பரையினரும் இடையறாது அநுஸ்யூத சிஷ்ய ஸம்பத்துடனும் வந்து கொண்டிருப்பதனால் எதிரிகளின் ப்ரதிப்ரச்நத்திற்கு அவகாசமில்லையே. இனி, கேள்வியுண்டானால் இதைப்பற்றி வெகு விளக்கமாகத் தெரிவிப்போம்.

8. எதிர் வகுப்பினர் ஈச்வர ஸ்ருஷ்டியில் புதிதாக ஸ்ருஷ்டிக்கப்பட்டார்க ளென்றா நாம் சொல்லுகிறோம்? இல்லை. இவர்களுடைய பரம்பரையும் நெடு நாளாகவே யிருந்து வருவதுதான். ஆனால் ஆழ்வாராசார்ய பரம்பரையில் படியத் தொடங்கினது புதிது புதிதே. இதை இன்னமும் நன்கு நிரூபிக்கிறோம் காண்மின். அரசாணிபாலை வேங்கடாத்வரி ச்லேஷயமக சக்ரவர்த்தியென்று ப்ரஸித்தரான ப்ரசண்ட பண்டிதர் இவருடைய க்ருதிகளில் லக்ஷ்மீ ஸஹஸ்ரம் மிகவும் ப்ரஸித்தமானது. அதில் அவர் அநேக ச்லோகங்களில் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு விபுத்வ முண்டென்றும் அணுத்வவாதம் அஸங்கதமென்றும் கூறுகிறார். அப்படி அவளுக்கு அணுத்வத்தைச் சொல்லுகிற ஆசாரியர்கள் இன்னாரென்பதை வியாக் கியான கர்த்தா விளக்குகிறார். அதில் ஐச்வர்ய ஸ்தபகத்தில் "ஸ்ரீமத்ராமாவரஜ

ஸரணிம் ச்ரேயஸீமாச்ரிதாநாம் ஆசார்யாணுமபிச குஹஸித்யஸ் தவாணுந்வவாத:" என்கிற சுலோகத்தின் வியாக்கியானத்தில் "பட்ட பராசராதீநாமபிச" என்று எழுதியுள்ளார். இதனுல், கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர் இவர்களுக்குப் ப்ரதிபக்ஷியென்று ஸ்பஷ்டமாகிறது. தேசிகன் பட்டரை அபர பாஷ்யகாரராக மதித்திருப்பவர். பட்டர் தத்வரத்நாகரமென்று ஒரு க்ரந்தமருளிச் செய்திருந்தார். அது தேசிகன் காலத்திலிருந்தது; பிறகு லுப்தம். அதில் வ்ருத்தி க்ரந்தத்திற்கு விருத்தமாக ஒரு விஷயம் அருளிச் செய்யப்பட்டிருப்பதாக அநுவதித்து, அவருடைய ஸ்ரீஸூக்திக்கு நாம் என்ன மறுப்புரைக்க முடியுமென்று கைகூப்புகிறார் தேசிகன் அதிகரண ஸாராவளியில் "வ்ருத்தி க்ரந்தேது" என்ற சுலோகத்தில்.

9. இங்ஙனே தேசிகன் மஹாசார்யராக மதித்திருக்கும் பட்டரை ப்ரதிபக்ஷியாகக் கொள்ளுமவர்களுடைய மதம் எதுவாயிருக்கவேணுமென்று ஆராய்மின். எம்முடைய ஆராய்ச்சிக்கு இத்தகைய விஷயங்கள் மிகவும் கைகொடுப்பவை. எதிர்வகுப்பில் மிகப் பெரிய வித்வான்களா யிருந்தவர்களும் ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு அத்யந்த வைதேசிகர்களாகவே யிருந்து போந்தார்களென்பதற்கு இது முதன்மையான ஸாக்ஷியாகும். "இன்னின்ன ஆசாரியர்கள் நமக்கு உத்தேச்யர்கள், இன்னின்ன ஆசார்யர்கள் அநுத்தேச்யர்கள்" என்கிற விவேக சக்தியு மற்றவர்களாகவன்றே எதிர்த்தலைப் புராதன பண்டித மணிகள் விளங்கியிருந்தார்கள்.

10. மேலே நாமெடுத்துக்காட்டின விஷயத்தில் இப்போதுள்ளவர்கள் இருவகையான ஸமாதானம் சொல்லக் கூடும். (1) ஸம்ப்ரதாயஸரணியில் அடியோடு பிரவேசமில்லாதவரான அவர் எழுதியிருப்பது அநாதரணீயம்—என்று சொல்லுவது ஒருவகை. (2) பட்டர் எங்களுடைய பரம்பரையிற் சேர்ந்த ஆசார்யரல்லாமையாலே அவரை ப்ரதிபக்ஷியாகக்கொண்டது யுக்தமே—என்பது மற்றொரு வகை. மூன்றுவது வகையான ஸமாதானம் எதுவும் சொல்லப்போகாது. இவ்விருவகையான ஸமாதானமும் ஏலாதவையே.

11. முந்தின ஸமாதானத்தில் ஸித்தஸாதனமே தோஷமாகிறது. இவர்களுடைய வகுப்பில் ஸம்ப்ரதாயாவகாஹனமுள்ள வித்வான்கள் எந்நாளிலும் எவரும் இருந்ததில்லையென்கிற நம்முடைய வாதமே ஊர்ஜிதமாகிறது. சில வருடங்களுக்கு முன்பு பல வைகாநஸர்கள் கூடிப் பூந்தமல்லியில் ஒரு பரிஷத்து நடத்த முயன்று அதற்காக அச்சிட்ட விளம்பரப் பத்திரிகையில் "நம்முடைய ஸம்பிரதாயத்திற்கு மூலாதாரபூதர்களான பராங்குச பரகால யதிவராதிகளான ஆழ்வார்களுக்குள்ளே தலைவரான திருக்கச்சிநம்பிகளின் அவதாரஸ்தலத்திலே ..........நடக்கப்போகிறது" என்று பிரசுரித்தார்கள். இங்ஙனே பலபல நினைவுக்கு வருகின்றன. இனி இரண்டாவது வகையான ஸமாதானத்தில் நாம் அதிகம் சொல்லவேண்டியதொன்றுமில்லை; பட்டரை ப்ரதிபக்ஷியாகக் கொள்பவர்கள் ஆழ்வார் எம்பெருமானுர் ஆளவந்தார் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான யாவரையுமே பிரதிபக்ஷிகளாகக் கொள்ளக் குறையில்லை. இதுவொரு லோக விலக்ஷணமான மதம் என்றுதான் தேறி நிற்கும்.

12. ஆக இவ்வளவாலும் என்ன நிர்ணயிக்கப்பட்டதென்றால்; கோபால தேசிகோபஜ்ஞமான இவர்களுடைய ஸம்பிரதாயமானது அந்த கோபாலார்

யர்க்கு முந்தி திவ்யஸூரி ஸம்பந்தமோ திவ்ய ப்ரபந்த ஸம்பந்தமோ திவ்யதேச ஸம்பந்தமோ பெற்றிருந்தது கிடையாது. பின்னை லோகாசார்யரோ தேசிகனோ மணவாளமாமுனிகளோ மற்று எந்த ஆசார்யரோ ஆக எல்லாரிடத்திலும் இவர்கள் துல்ய ப்ரதிபத்தி கொண்டவர்களாகவே யிருந்துவந்தார்கள். *காம்பறத் தலை சிரைத்து உன் கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பர் என்று தொண்டரடிப்பொடியாழ்வாரால் மங்களாசாஸனம் பெற்றவர்களும், *பதியேபரவித் தொழுந் தொண்டரென்றும் *உலகமேத்துங் கண்டியூர ரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினாரென்றும் கலியன் திருவாக்குக்கு இலக்கானவர்களுமான தென்னாசாரியர்களே ஆங்காங்கு சில திவ்யதேசங்களில் தேசிக விக்ரஹ ப்ரதிஷ்டையையும் செய்வித்தவர்கள். மற்றையோர் செய்யப்ரஸக்தி ஏது?

13. பெரும்பாலும் திவ்யதேசங்களிலும் ஆழ்வாராசார்யர்களின் திருவவதார ஸ்தலங்களொன்றுதப்பாமல்எல்லாவற்றிலும் நெடுநாளாக நிராபாதமான கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரர்களான தென்னாசார்யர்களைத் தவிர்த்து மற்றையோர்கள் ஆலயங்களில் தேசிகனை ப்ரதிஷ்டைசெய்ய ப்ரஸக்திலேசமும் கிடையாது. கோவில்களில் இவர்கள் வந்து சேர்ந்த நாள் முதல் க்ஷணம்முதல் யுத்தகாண்டமே என்பது இவர்களின் சரித்திரங்களினால் ஸுஸ்பஷ்டம். ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியில் சென்ற நூற்றாண்டில் நடந்த தென்கலை வடகலை விவாதங்களைப் பற்றி நாம் நம்முடைய சில நூல்களில் ஒரு முக்கியமான விஷயம் எழுதியிருந்தோம்; என்ன எழுதியிருந்தோமென்பதை இங்கு முன்னம் எடுத்துக்காட்டி, அதற்கு ஸமீப காலத்தில் கிடைத்த வெற்றியை அடுத்தபடியாக விளக்கிக் காட்டுகிறோம். முன்பு நாம் எழுதியிருந்ததென்னவென்றால், 1955 ஜனவரி மாதத்தில் வெளியிட்ட ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரனில்

"காஞ்சீபுரம்தேவப்பெருமான் ஸந்நிதியிலும் தீபப்ரகாசதேசிக ஸந்நிதியிலும் நவீனர்கள் விவாதம் பண்ணத் தொடங்கின காலத்தில் திருவள்ளூர் ஸந்நிதியின் அநுஷ்டானம் நிஷ்களங்கமாய் நிஷ்கல்மஷமாயிருந்தது. ஆனதுபற்றியே அந்த ஸந்நிதியின் ஆசாரங்களையொட்டியே காஞ்சீபுரத்திற்கு பாத்ர ஜட்ஜ்மெண்டுகள் அவதரித்தன. இவ்விஷயம் மூன்று கோர்ட்டு ஜட்ஜ்களாலும் விசதமாக எழுதப்பட்டு விளங்கா நின்றது. அப்படிப்பட்ட திருவுள்ளூர் ஸந்நிதி தலைகீழாக மாறிவிட்டதனாலே தத்வார்த்தங்கூட வா மாறிவிடும். இந்த ஸந்நிதியில் அத்யாபகத் தொடக்கமிராசு அஹோபில ஸ்வாமிக்கு அதீநமாயிருந்ததுபோல, காஞ்சீபுரத்தைச்சேர்ந்த திருப்புட்குழி ஸ்ரீபெரும்பூதூர் முதலான திவ்யஸ்தலங்களில் அந்த மிராசு கோடிகன்னிகாதானம் தாதாசார்ய வம்சஸ்தர்களுக்கு அதீனமாயிருந்தது. அவர்கள் கிரமமான நிலையில் இருந்த வரையில் தங்கள் கைங்கரியத்தைக் குறையறச்செய்து ஒரு கஷ்டமுமநுபவியாமல் ஆச்சரியமான மரியாதைகளையும் பஹுமானங்களையும் அநுபவித்து வந்தார்கள். ஆனால் அவர்கள் விபரீதமான நிலைமையை ஏறிட்டுக்

கொண்டதுமுதல் காஞ்சீபுர திவ்ய தேசங்களிலும் திருப்புட்குழியி லும் ஸ்ரீபெரும்பூதூரிலும் எவ்வளவு கஷ்டங்களை யநுபவிக்கப்ராப் தாரானார்களென்பதை உலகமுழுது முணருமே. ஸ்ரீபெரும்பூதூரில் ஒருவிதமான கலஹமுமில்லாமல் நடந்துவந்த விஷயம் எச்சகுண தர்சத்தில் ஏறிக்கிடக்கிறது. பிறகு வெகுநாள் கழித்து அங்கே வட கலையார் சண்டைகளைக் கிளப்பி அபரிமிதமான வியவஹாரங்கள் நடந்தன. ப்ரஹ்மஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்கிறவொரு பிரபல அட்வகேட் அங்கு வடகலையார்களுக்கு வக்கிலாக இருந்தார். அப் போது ஸ்ரீபெரும்பூதூர் வியாஜ்ஜியம் கடைசியாக ஹைகோர்ட் டில் இருந்தது. அந்த ஸமயத்தில், மேலே சொன்ன வடகலையார் வக்கீ லான ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்தா னத்தில் அமர்ந்தார். அப்போது ஹைகோர்ட்டிலிருந்த ஸ்ரீபெரும் பூதூர் ஸந்நிதி யப்பீல் அந்த கிருஷ்ணஸாமி ஐயருடைய பெஞ்சில் வந்தது. ஏற்கெனவே பல வருஷங்கள் வடகலையார்க்கு வக்கிலா யிருந்த இவருடைய பெஞ்சில் இந்த அப்பீல் நடக்கத் தகாதென்றும், இவரிடம் நடந்தால் நியாயம் தேருதென்றும் தென்கலையார் ஆக்ஷே பிக்கத் தீவிரமான முயற்சி கொண்டும் பலிக்கவில்லை. அவரே விசா ரிப்பதாக கேஸை எடுத்துக் கொண்டார். வடகலையார் நமக்கே வெற்றியென்று நிச்சயித்து ஆனந்தமாயிருக்கிறார்கள்; தென்கலையார் கவிழ்தலையிட்டு வருந்திக் கிடக்கிறார்கள். ஜட்ஜ் கிருஷ்ணஸாமி ஐய ரவர்கள் கேஸை எடுத்துக் கொண்டு அன்றே அலப்பிக கவிழ்த்து விட்டார். அவர் நெடுநாள் வடகலையார்களுக்கு வக்கீலாயிருந்த படி யால் எல்லா ரிகார்டுகளையும் ஒன்றுவிடாமல் முற்றிலும் பார்த்தவ ராகையாலே ப்ராமாணிகராய் மனச்சாட்சியை மீறமாட்டாமல்,

"தாதாசார்ய குடும்பஸ்தர்கள் தங்களுக்குக் குலபரம்பரையாக வந்த ஸ்ரீசைலேசமந்த்ரத்தை விட்டு வடகலை மந்த்ரத்தை ஆதரிக்கத் தொடங் கினதுதான் இவ்வளவு சண்டைக்கும் காரணம்; அதிலிருந்தே தாதா சாரியர்கள் தங்கள் கவுரவங்களை இழக்க நேர்ந்தது" என்று சிலாசாஸனமாக எழுதிவைத்தார்."

இப்படிநாம் எழுதியிருந்ததைக் கண்ட நவீனர்கள் "ஸ்ரீபெரும்பூதூர் வ்யவஹாரத்தில் ஜட்ஜ் இப்படி யெழுதிருப்பதாகச் சொல்வது பொய்" என்று அடாவடியடித்து வந்தார்கள்.

14. ஸமீபகாலத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வியவஹாரமொன்று செங்கற் பட்டு ஸப்கோர்ட்டில் முடிவடைந்தது. அதைப்பற்றி அவ்வூர் ஸ்ரீ உ. வே. பார்த்தஸாரதி ஐயங்காரென்பவர் எழுதியிருந்த வியாஸமொன்று இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக ஸ்ரீரங்கத்திலிருந்து வெளிவரும் அம்ருதலஹரி என்னும் மாதப் பத்திரிகையில் 217 லக்கமுள்ள நேற்று ஜனவரி மாத ஸஞ்சிகையில் ஸ்ரீபெரும்பூதூர் வ்யவஹாரம் என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்தது; அந்த வியா ஸத்தை முன்னம் ஈண்டு அநுவதிப்போம். (அதாவது)—

"இவ்வூர் ஆதிகேசவப்பெருமாள் ஸ்ரீ பாஷ்யகாரஸ்வாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ வேதாந்தாசார்ய விக்ரஹமும் திருவாராதனத்தில் இருந்து வருவது ப்ரஸித்தமானது. அவருக்காக ஏற்பட்டிருக்கிற தஸ்திக்கின்படி [அதாவது வருமானத்திற்குத் தக்கபடி] மாஸ திருநக்ஷத்ர பரிபாலனமும் வருஷ திருநக்ஷத்ர பரிபாலனமும் உசிதமாக தேவஸ்தானத்தாரால் செய்யப்பட்டு வருகிறது. இவ்விக்ரஹம் இந்த தேவஸ்தானத்தில் ஏற்பட்டது முதல் மற்ற ஆசாரியர்களுக்குப் போலவே இவருக்கும் தென்கலைத் திருமண் காப்பு ஏற்பட்டிருக்கிறது. 70, 75 வருஷங்களுக்கு முன்பு இந்த தேவஸ்தானத்திலும் வடகலை வகுப்பினர்கள் விஷம புத்தியுடன் கலஹங்களைச் செய்ய ஆரம்பித்ததும், ஸிவில் கோர்ட்டுகளிலும் கிரிமினல் கோர்ட்டுகளிலும் வழக்குகள் ஏறி, இந்த தேவஸ்தானத்தில் வடகலையார்களுக்கு எவ்விதமான ஹக்குமில்லையென்று நீதிபதிகளால் முடிக்கப்பட்டுப் போனதும் ப்ரஸித்தமானதே. வடகலையார்கள் வேதாந்தாசாரியரைத் தங்களுக்கு குருவாகக் கொள்ள என்றைக்கு ஆரம்பித்தார்களோ அன்று முதலாகவே சில தேவஸ்தானங்களில் வேதாந்தாசாரியர்க்கு வடகலை நாமம் போட்டு வைக்க வேணுமென்கிற முயற்சியிலும் தீவ்ரமாக ஈடுபட்டிருக்கிறார்களென்பதை உலகமறியும். வேதாந்தாசாரியர் திருநாட்டுக்கெழுந்தருளி ஏறக்குறைய 600 வருஷமாகிறது. அந்த காலந்தொட்டே இவர்களுக்கு வேதாந்தாசாரியரோடு தொடர்பு இருந்திருக்குமானால் கோவில்களில் அவரைப்பற்றின விவாதம் நவீன காலத்தில் இந்தவிதமாக ஏற்பட்டிருக்க நியாயமேயிராது."

"இதை புத்திமான்கள் ஆலோசிக்க வேணும். வடகலை குருவான வேதாந்தாசாரியர் தென்கலை தேவஸ்தானங்களில் எதற்காக ஸ்தாபிக்கப்படுவர்! என்று விவேகிகள் விமர்சிக்க வேண்டும். கோவில்களும், கோவில்களில் நடக்கிற ரீதிகளும் அபரிசுத்தங்களென்று தூஷித்துக்கொண்டு வெகு காலமாகவே விலகியிருந்தவர்கள், கோவில்களை நாம் அநியாயமாக விட்டுவிட்டோமே! என்று அநுதாபம் தோன்றப் பெற்ற நாளில் சில கோவில்களில் வந்துபுக ஆரம்பித்து, ஆரம்பமே யுத்த காண்டமாகச் செய்த நாளில் வேதாந்தாசாரியர் தங்களுக்கு குருவென்றும் தாங்கள் தரிக்கும் நாமத்தையே அவருக்கும் போட்டுவைக்க வேணுமென்றும் தீவ்ரமான கலஹங்களை உண்டுபண்ணத் தொடங்கினார்கள். அதன் பலனை விபரீதமாகவே இவர்கள் கைகண்டார்கள். அதன்மேல் கோவில்களுக்கு வெளிப்பட்ட இடங்களில் வேதாந்தாசாரியருக்கு ஸன்னிதி நிர்மாணங்களைச் செய்து அங்கே தங்க ளிஷ்டப்படி நடத்திக்கொள்ள ஆரம்பித்தார்கள். 10, 12 திவ்ய தேசங்களில் இந்த நிகழ்ச்சியை யாவரும் காணலாம். இப்படி வெளிக்கோவில்களைக் கட்டிக்கொண்டு குலாவுவது ஏறக்குறைய நூறு வருஷங்களாக. இதே விதமாக ஸ்ரீபெரும்பூதூரிலும் வேதாந்தாசாரியர்க்கு தனிக்கோயில் கட்டிக் குலாவ ஆரம்பித்தார்கள்.' இதில் யாரும் தவறு நினைக்க இடமில்லை. புராதனமான தேவஸ்தானங்களில் புகுந்து கலஹங்கள் விளைப்பதை நிறுத்தி ஸ்வக்ருஹம் போன்ற இடங்களில் இவர்கள் கொண்டாட்டங்களை நிகழ்த்திக்கொள்வதை தப்பென்று யார் சொல்லுவார்கள்? அவ்வளவோடு சாந்தியுடன் நிற்பது அழகு. தாங்கள் முதன் முதலாக எந்தெந்த தேவஸ்தானங்களில் விண்ணப்பு விப்ரதிபத்திகளைக் கிளப்பினார்களோ அதை அநியாயமாக விட்டுவிடுவதா? என்று ரோஷமுண்டாகி இப்போதிப்போதாகப் பழைய கலஹங்களைத் திரும்பவும் கிளப்பப் புறப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதியில் இவர்கள் கலஹங்கள் செய்துகொண்டிருந்த காலத்தில் அதிகாரிகளிடஞ் சென்று "எங்கள் குலகுருவான தேசிகருக்கு அநியாயமாய் தென்கலைநாமத்தைப்போட்டு வைத்திருக்கிறார்களே? இது நியாயமா?" என்று

முறையிடுவார்கள். அவ்வதிகாரிகள் விசாரணை செய்து உண்மையை யறிந்து கொள்ள தேவஸ்தானத்திற்கு வந்து வேதாந்தாசார்ய விக்ரஹத்தைப் பரிசீலனை செய்வார்கள். விக்ரஹத்தின் லலாடத்தில் தென்கலைத் திருமண் ரேகை ஸ்பஷ்டமாக விளங்குவதைக் கண்டு 'நீங்கள் வீண் கலஹக் காரர்கள்' என்று சொல்லி மறுத்துவிட்டுப் போவார்களதிகாரிகள். அதற்குமேல் "ரேகை தென்கலை, குழைத்துப்போடுகிற நாமம் வடகலை ஐயா!" என்று மன்றுடுவார்கள். இப்படிப் பட்ட வம்புவின் காலம் கழிந்து வெகுநாளாயிற்று. இந்த விவாதத்தை 10, 15 வருஷ காலமாக ஸ்ரீபெரும்பூதூரில் ஒருவர் கிளப்பி இதை ஜீவனாதாரமாகக் கொண்டிருக்கிறார். சென்னை ஹிந்து ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டில் "ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்திலுள்ள தேசிக விக்ரஹத்திற்கு வடகலை நாமம் போட்டுவைக்க வேணும்" என்று எட்டு வருடங்களுக்கு முன்பு வியாஜ்ஜியம் தொடுத்து பங்கமடைந்து கைவொழிந்திருந்தார். ஜீவனாதாரத்தை விட்டுவிடுவதா? என்று சங்கற்பட்டு ஸப் ஜட்ஜ் கோர்ட்டில் அந்த வ்யவஹாரத்தையே மறுபடியும் த்வஜாரோஹணம் செய்துவைத்தார். சென்ற டிசம்பர் மாதத்திடையில் அந்த வியவஹாரத்திலும் கோர்ட்டு காஸ்டுடன் பங்கமடைந்தாயிற்று. மேன்மேலும் கோர்ட்டுகள் இல்லாமற் போகவில்லையே. உயிருள்ளவளவும் விடேனென்று மூஷ்டி பிடித்திருக்கிறார். இவர்களுக்கு வேதாந்தாசாரியார் எந்த விதத்தில் குரு? எத்தனை நாளாக குரு? என்பதை நிரூபணம் செய்துவிட்டால் உலகத்திலுள்ள ஸகல தேவஸ்தானங்களுக்கும் வடகலை நாமம் போட்டு வைக்கலாம். ருஜுவான அந்த வழியில் வருவாரில்லையே யென்று பல பெரியார்கள் சோகிக்கிறார்கள். "நாங்கள் யாதவப்ரகாசருடைய பரம்பரையைச் சேர்ந்தவர்கள்" என்று சொல்லிக் கொண்டு, "ஸ்வபராதுத்தந்த யாதவப்ரகாச:" என்னப்பட்ட ஸ்வாமி ஸந்நிதியிலே அவருடைய விக்ரஹத்தை வைக்க வேணுமென்று வழக்காடினுலாவது இவர்கள் ஒருகால் வெற்றிபெறக்கூடும். இனியாகிலும் இந்த வழக்குக்கு முன்வருவார்களா?' என்கிற இந்த வியாஸம் வெளிவந்திருக்கின்றது.

15. இவர் எழுதியது கிடக்கட்டும். இந்த வியவஹாரத்தைப் பரிசீலனை செய்த ஸப்ஜட்ஜ் என்ன எழுதியிருக்கிறாரென்று பார்க்கவேண்டும்.

(15-12-1961) செங்கல்பட்டு சப் கோர்ட்டில் முடிந்த ஸ்ரீபெரும்பூதூர் கேஸ் (O. S. 27/56) தீர்மானத்தின் 15-வது பாராவின் (Paragraph 15 of the Judgment) Copyயும் அதன் மொழிபெயர்ப்பும்.

Subsequently the Vadagalais filed four suits in the D. M. C. Kancheepuram namely O S 1058 of 1899 O. S. 33 of 1903, O. S. 60 of 1903 and O. S. 61 of 1903. Ex.-A 4 is printed copy of judgment of the District Munsif in O. S. 1058/59. All these suits went up to the High Court in Second Appeal Nos. 952 to 955 of 1905. Ex. A-6 in the printed pleadings for S. A. No 952 of 1905 The judgment on these appeals is reported in 19 M. L. J. Page 257. At pages 267 and 268, the High Court has stated as follows :—

"The plaintiffs (Vadagalais) ever since 1885 have been altogether excluded from the office of the first Theerthakar by the defendants who successfully prevented them from exercising any of its functions and enjoying its privileges. We may observe here, that the apparent origin of the dispute which led to the dispossession of Thathachariar is that they

wrongly insisted on introducing the Vadagalai Mantram into certain rituals instead of the Tengalai Mantram."

This observation of the High Court would show that the Thathacharis had to lose their position as first Theerthakar because they attempted to introduce Vadagalai form of worship sometime in 1885 contrary to the established usage to Tengalai form of worship......"

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு வருமாறு) :—15. பிறகு, காஞ்சீபுரம் டி. மு. கோர்ட்டில் வடகலையார்கள் அசல் நெ. 1058/1899, நெ. 38/1903, நெ. 60/03, நெ. 61/03 உள்ள நான்கு வியாஜ்ஜியங்கள் தொடர்ந்தார்கள். பிரக்ருத கேஸில் Exhibit A-4 என்பது ஷை அசல் நெ. 1058 of 1899-ன் தீர்ப்பின் அச்சுக்காபி. இந்த நான்கு வியாஜ்ஜியங்களும் High Courtக்கு இரண்டாவது Appeal ஆக சென்று Appeal Nos. 952 to 955 of 1905ல் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. Exhibit A-6, என்பது Appeal No. 952/05ல் High Courtல் அச்சிடப்பட்ட கீழ்க்கோர்ட்டு தாவாக்களின் விவரங்கள் (Printed Pleadings) இந்த அப்பீல்களின் தீர்ப்பு (Judgment) 19 M.L.J. Page 257ல் ரிபோர்ட்டு செய்யப்பட்டிருக்கிறது. இதில் பக்கம் 267, 263ல் கீழ்வருமாறு சொல்லப்பட்டுள்ளது.

"வாதிகள் (வடகலையார்கள்) தங்களுடைய முதல்தீர்த்த Office களிலிருந்து அடியோடு பிரதிவாதியால் வெற்றிகரமாக விலக்கப்பட்டு அவர்கள் செய்யவேண்டிய காரியங்களையும் அடையவேண்டிய மரியாதைகளையும் இழக்கும்படி ஆக்கப்பட்டார்கள். இங்கு நாம் சொல்ல விரும்புவது என்னவென்றால், தாதாசாரியர் இப்படி தம்முடைய பாத்தியதையை இழக்கும்படி தாவா ஏற்பட்டதற்கு மூலகாரணம் அவர்கள் அக்ரமமாக கோயில் சடங்குகளில் தென்கலை மந்திரத்திற்குப் பதிலாக வடகலை மந்திரத்தை புகுத்த வற்புறுத்தியதே" High Court தீர்ப்பில் கண்டுள்ள மேல்கண்ட வாசகத்தினால் தாதாசாரியர்கள் கி. பி. 1885ம் வருஷத்துக்குச் சேர்ந்தாப்போல் ஒரு காலத்தில், அப்போது நிச்சயமாய் ஏற்பட்டிருந்த மாமூல் தென்கலை ஆசாரத்துக்கு மாறாக, பூஜையில் வடகலை ஆசாரத்தைப் புகுத்த ப்ரயத்தனப்பட்டதின் காரணத்தினால் தங்களது முதல் தீர்த்த பதவியை இழக்க நேர்ந்தது என்பது விளங்கும்......"

ஆக, இந்த ஜட்ஜ்மெண்டினால் ஸத்ஸம்பிரதாய பாஸ்கரனில் நாமெழுதியிருந்த விஷயம் ஸத்யமென்று ருபிக்கப்பட்டதாயிற்று. ஜட்ஜின் பெயரில் மட்டும் மாறுபாடு இருக்கலாமத்தனை.

16. தேசிகனுடைய அவதார ஸ்தலத்தைப்பற்றின ரிகார்டுகளில் எதையெடுத்தாலும் அத்தலத்தில் தென்கலைத் திருமண்காப்புக்கும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனுக்கும் ப்ராபல்யம் காண்கிறதேயொழிய வடகலைத் திருமணுக்கும் ராமாநுஜ தயாபாத்ரத்திற்கும் எவ்விதமான ஸம்பந்தமும் காணப்படுவதில்லை. அவையிரண்டில் திருமண் மட்டும் அத்தலத்தில் இடையில் வந்து புகுந்துகொண்டதென்பது ரிகார்டுகளினால் வ்யக்தமாக விளங்குகின்றது; ராமாநுஜதயாபாத்ரம் வந்துபுகுவதற்கு ப்ரஸக்தியோ அவகாசமோ இல்லையாயிற்று. வடகலை நாமம்மட்டும் எப்படி வந்து புகுந்ததென்பதைப்பற்றி மேலே விவரிப்போம். முன்னம் சில நூற்றாண்டு

களாகத் தென்கலைத் திருமண்காப்புதானிருந்ததென்பது அசைக்க முடியாதபடி தேறியிருக்கின்றது. எதிரிகள் தேசிகனோடு உறவு கொண்டாட ஆரம்பிப்பதற்கு முன்பு அவருடைய திவ்ய மங்கள விக்ரஹம் எவ்விதமான திருமண் ஸந்நிவேசத்தோடிருந்ததோ, எந்த வகுப்பினருடைய கைங்கர்ய ஸாம்ராஜ்யம் அங்கு விளங்கி வந்ததோ அதெல்லாம் நிர்விவாதமாகவும் ஒழுங்காகவும் நடைபெற்று வந்தது. இவர்கள் தேசிகனோடு உறவு கொண்டாட ஆரம்பித்த பிறகு மேலே சொன்ன இரண்டு ஆசாரங்களையும் மாற்ற மிகவும் பாடுபட்டார்கள். நூதன பாத்திரத் தனியன் அங்கு ப்ரவேசிக்க வழியே இடையாதென்று தெளிந்துகொண்டார்கள்.

17. அந்தஸமயத்தில் என்னசெய்தார்களென்றால், இந்ததென்கலை வேதாந்தாசாரியரை விட்டுத்தொலைத்து வடகலைத்தேசிகனைப் புதிதாகப்பிரதிஷ்டைசெய்துகொண்டு அந்தக் கோவிலில் நாம் நமக்கு இஷ்டமானபடி கோஷித்துக் கொள்ளுவோமென்று நிச்சயித்து வேகவதிக்கரையில் ஸ்ரீரங்கராஜ வீதியென்கிற ஒரு புதுத் தெருவில் ஒரு கோவில் கட்டி அதில் ஸ்வாமியைப் பிரதிஷ்டை செய்வித்து அவருக்கு உத்ஸவாதிகளும் யதேஷ்டமாக நடத்தி வந்தார்கள். அங்கு விபவவருஷத்தில் நடந்த விச்வப்ரஸித்தமான கஜேந்த்ர கோலாஹல க்ரீடையினால் அங்கும் வைரஸ்ய முண்டாயிற்று. "தேசிகன் தீபப்ரகாச ஸந்நிதி பரிஸரத்தில் திருவவதரித்தவராகையாலே அந்த பரிஸரத்திலேயே புதியதொரு ஸன்னிதியைக் கட்டி அதிலே ஸ்வாமியை சிஷ்யர்களுடனும் ப்ரதிஷ்டை செய்வித்து அங்கே நம்முடைய கோலாஹலங்களை யதேஷ்டமாகச் செய்வோம்" என்று நிச்சயித்து, ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (மைஸூர்) ஸ்ரீபரகால மடாதிபதி ஸ்வாமிகளை யநுவர்த்தித்து வேண்டி பழைய தேசிக ஸன்னிதி ஸமீபத்திலேயே புது ஸன்னிதியொன்று கட்டுவித்து அங்கே ஸ்வச்சந்த கோலாஹலங்கள் செய்துவரத் தொடங்கினார்கள். இதில் விவாதத்திற்கு எவ்விதமான ப்ரஸக்தியும் கிடையாதன்றோ. ஏதோவொரு விவாதமென்றும் சண்டையென்றுமிருந்தால்தானே அதை வியாஜமாக இட்டு ஆங்காங்குப் பொருளீட்டலாம். சண்டையும் விவாதமுமின்றிக்கே நடந்துகொண்டு போவதில் த்ருப்தியுண்டாகாமையினாலும் பொருளீட்டுவதற்கு வழியில்லாமையினாலும், கஷ்டப்பட்டுக் கட்டுவித்த ஸ்ரீரங்கராஜவீதி ஸன்னிதியையும் ஸ்ரீபரகாலமடத்து ஸன்னிதியையும் விட்டிட்டு, பழைய ஸன்னிதியிலேயே போராட வேண்டியதென்று துணிந்து சிலவாண்டுகளாய் இங்கே விவாதத்தையும் கலஹத்தையும் வளரச்செய்யப் பாரித்து வருகிறார்கள்.

18. அதிகாரிகளிடம் சென்று இவர்கள் முறையிடுவது என்னவென்றால்—

"இந்த அநியாயத்தையும் அக்ரமத்தையும் பார்த்தீர்களா? தேசிகன் வடகலை குருவென்பது உலகமறிந்த விஷயம். எங்கள் குருவிடம் தென்கலையாருக்கு என்ன காரியம்? வீணாக எங்களுக்கு மனவருத்தத்தை யுண்டுபண்ணவேணுமென்கிற கெட்ட எண்ணங்கொண்டு தானே எங்கள் குருவிடம் வந்து எங்களுக்குக் கர்ணகடூரமான மந்திரப் பிரபந்தங்களைச் சொல்லி எங்களை ஹிம்ஸிக்கிறார்கள். தென்கலை குருவான மணவாளமாமுனிகள் முதலானவரிடத்தில் நாங்கள் போகிறோமா? அவர்களுக்கு நாங்கள் ஏதாவது மனவருத்தத்தை யுண்டாக்குகிறோமா? இவர்கள் மட்டும் எங்கள் குருவிடம்வந்து எங்களுக்கு மனவருத்தமான காரியங்களை ஏதுக்குச் செய்யவேணும்? இது நியாயமா? தாங்களே பாருங்கள். இது மிகவும் அநீதியென்று தர்மப் பிரபுக்களான உங்கள்

மனதில் தோன்றவில்லையா? கொஞ்சம் பெரிய மனது பண்ணி இதைக் கவனியுங்கள்.''

என்று முறையிடுகிறார்கள். கண்ணீரைப்பெருக்கி அழுதுங் காட்டுகிறார்கள். அழுகைக்கென்றே இட்டுப் பிறந்த வொருவர் இருக்கிறார்; அவர் விக்கிவிக்கியழுதுங் கூறுவர் இப்பேச்சுக்களை. சில அதிகாரிகள் இவற்றையெல்லாங் கேட்டு ''ஆமாம், ஆமாம், அநீதிதான்'' என்று தலையை யாட்டிவிட்டுப் போவார்கள். விவேகிகளும் மேதாவிகளுமான சில அதிகாரிகள் இந்தப் பேச்சுக்களையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்து, உடனே அவர்களைக் கேட்கிறார்கள்;

19. என்ன கேட்கிறார்கள் என்றால், ஸன்றிக் கேண்மின்;

''நீங்கள் தேசிகரை வடகலை குருவென்கிறீர்கள்; அவர் வடகலை குருவாயிருந்தால் அவருடைய சன்னிதானத்தில் தென்கலையாருக்கு எப்படி மிராசுகள் கிடைத்திருக்கக்கூடும்? மிராசுகள் கிடைப்பதிருக்கட்டும்; தென்கலையான நமக்கு வடகலை குருவினிடத்தில் என்ன காரியம் என்று அவர்களே ஒதுங்கியிருக்கவேண்டாமா? ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்மார்த்த குருவாகிய சங்கராசாரியரைத் தங்கள் கோவில்களில் வைத்து வழிபாடு செய்வதுண்டா? அவருடைய விக்கிரகம் வீதியிலே வந்தால் தண்ணீர் தெளித்துக் கோலமிட்டுத் தொழுவதுண்டா? ஸ்ரீ வைஷ்ணவர்களிலேயே அஹோபிலம் ஸ்வாமிக்கு ஆங்காங்கு விக்ரஹம் ஏற்பட்டு உத்ஸவாதிகளும் நடக்கிறதே; அவர் வீதியிலே விஜயம் செய்தால் தென்கலையார் தொழுகிறார்களோ? எந்த ஊரிலாவது தொழுகிறார்களோ? இல்லையே. வடகலையாருக்கு அடியோடு சம்பந்தமில்லாத தேவஸ்தானங்களிலும் தென்கலையார் தேசிகரை வைத்து வழிபாடுசெய்வதும் தவிர தேசிகருடைய கிரமமான தனியனையும் அவர்கள் சொல்லி வருகிறார்களே; தென்கலை குருக்களின் தனியன்களை நீங்கள் சொல்லுவதுண்டோ? அவர்களுடைய கோவிலுக்காவது போவதுண்டோ? இல்லையே. அவர்கள்மட்டும் தேசிகரை வைத்து உத்ஸவாதிகள் நடத்தி வருவதையும் தனியன் சொல்லித் துதித்து வருவதையும், இந்த ஆசாரங்கள் இன்று நேற்று உண்டாகாமல் புராதனமாக இருந்துவருவதையும் கண்டால் தேசிகரை வடகலை குருவென்று நீங்கள் சொல்லுவதற்கு ஒரு விதமான பொருத்தமும் காணவில்லையே. ஸ்ரீரங்கத்தில் தேவஸ்தானத்தைச் சேர்ந்த தேசிகருக்கு நெடுநாளாக இருந்த தென்கலைத்திருமணை அழித்து ஒரு நிமிஷம் வடகலை நாமமிட்டு வெளியில் கொணர்ந்ததற்காக ஆயிரம் ரூ. அபராதம் விதிக்கப்பட்டதென்றால் அவரை வடகலை குருவாக எப்படி கொள்ள முடியும். அந்த ஸ்ரீரங்கத்தில் தேசிகர் கோவில் வாசலில் காரைக் கட்டிடமான புராதன தென்கலைத் திருமண் நாளைக்கும் விளங்கிக்கொண்டிருக்கிறதே. அவதார ஸ்தலத்திலிருந்த தென்கலைத்திருமண் காரைக்கட்டிடத்தை நீங்கள் இடித்துத்தள்ளினதுபோல் அதை ஏன் இடிக்க முடியவில்லை. தவிர முக்கியமான ஒரு கேள்வி கேட்கிறேன், திருவள்ளூர் முதலான சில தேவஸ்தானங்கள் தென்கலையாக இருந்தவை வடகலையாகமாற்றப்பட்ட பின்பு தென்கலை குருவான மணவாளமாமுனிகளை அந்த தேவஸ்தானங்களிலிருந்து நீங்கள் வெளிக்கிளப்பிவிட்டதுபோல தென்கலை தேவஸ்தானங்களிலிருந்த தேசிகரை ஓரிடத்திலாவது அவர்கள் அப்புறப்படுத்தியிருக்கிறார்களா? ஆழ்வார்

திருநகரியில் ஒரு வடகலை சிருஹமாவது உண்டா? இல்லையே: அப்படிப் பட்ட ஊரிலும் தேசிகரை அப்புறப்படுத்தாமல் வைத்து ஆராதிப்பது மட்டுமல்லாமல் அவரை ஆழ்வார் ஸன்னிதிக்கு எழுந்தருளப்பண்ணி உத்ஸவாதிகளும் நடத்திவருகிறார்களே; தென்கலையார்தானே நடத்தி வருகிறார்கள்: தேசிகர் வடகலை குருவாயிருந்தால் அந்த ஊரில் இது நடைபெறுமா? இப்படி நடப்பது அந்த ஒரு ஊரில் மட்டுமன்றே. இதையெல்லாம் நன்கு ஆலோசித்தால் தேசிகரை நீங்கள் வடகலை குரு வென்று சொல்லுவதையும், தென்கலையாரை தேசிக த்ரோஹிகளாகச் சொல்லுவதையும் நம்புவதற்கு ஈஷத்தும் இடமில்லையே! இதற்கெல்லாம் பூரண த்ருப்திகரமாக பதில் சொல்லுங்கள்''

என்று கேட்கிருர்கள். யார் கேட்கிருர்கள்? நடு நிலையிலிருக்கும் அதிகாரிகள்.

20. அப்போது வடகலையார்கள் என்ன பதில் சொல்லுகிருர்களென்ருல், அதையும் நாமே தெரிவிக்கிருேம்.

(வடகலையார் சொல்லுவது)—தென்கலையாருக்கு தேசிகரிடத்தில் உண்மையான பக்தி இருக்குமேயானுல் அவர்கள் தேசிகப் பிரபந்தங்களை ஏன் சொல்லுவதில்லை? ராமாநுஜாபாத்ரத் தனியனை எதற்கு ஆக்ஷேபிக்கவேண்டும்? இதை தாங்கள் ஆலோசித்து பதில் சொல்லுங்கள் என்கிருர்கள். மருமங்களை நன்கறிந்த அதிகாரிகளானுல் உடனே பதில் சொல்லிவிடுகிருர்கள்; மருமமறியாதவர்களானுல் தென்கலைத் தலைவர்களிடம் தத்துவங்களைக் கேட்டுணர்ந்து கொண்டு நல்ல தெளிவுடன் பதில் சொல்லுகிருர்கள். அதாவது,

"தென் கலையார்கள் தேசிகப் பிரபந்தங்களை ஏன் சொல்லுவதில்லை? என்கிற கேள்வியானது அசட்டுத் தனமான கேள்வியாகும். தேசிகர் மணிப்ரவாள பாஷையில் செய்த ரஹஸ்யங்களில் ஆதியிலும் அந்தத்திலும் வடமொழி சுலோகங்களைச் செய்து சேர்த்திருப்பதுபோல தமிழ்ப் பாசுரங்களையும் செய்து சேர்த்திருக்கிருர். அவ்வளவேயொழிய, தேசிகப் பிரபந்தமென்று அவர் தனியாக யாதொரு பிரபந்தமும் இயற்றியிருக்கவில்லை ரஹஸ்ய நூல்களிலுள்ள பாசுரங்களை நீங்கள் ஒன்று சேர்த்துப் பிரபந்தமாக்கி, பிரபந்தங்களுக்குப் பெயர்களையும் புதிதாக இட்டு சண்டைக்கு வழிதேடினீர்கள். இதைத் தென்கலையார் ஆமோதிக்க ப்ரஸக்தியில்லாமையாலே அவர்கள் இந்த பிரபந்தங்களைச் சொல்லுவதில்லை. அல்லது, தேசிகப் பிரபந்தங்களென்பவை தேசிகர் செய்த தென்றே வைத்துக் கொண்டாலும் அவற்றைத் தென்கலையார் சொல்லியேயாக வேணுமென்று என்ன கட்டாயம்? இராமாநுஜருடைய சிஷ்யரான அருளாளப் பெருமாளெம் பெருமானுர் செய்த ஞானசார ப்ரமேயசாரங்களை நீங்கள் சொல்லுகிறீர்களோ? ஸ்ரீராமாநுஜர் செய்த கத்யத்ரயம், கூரத்தாழ்வான் செய்த பஞ்சஸ்தவம், பட்டர் செய்த ஸ்ரீரங்க ராஜஸ்தவாதிகள்......இவற்றை யெல்லாம் நீங்கள் சொல்லுகிறீர்களோ? திருவரங்கத் தமுதனுருடைய திருக் குமாரரான பின்னைப் பெருமாளையங்கார் செய்த அஷ்டப் பிரபந்தங்களையாவது நீங்கள் சொல்லுகிறீர்களோ? இல்லையே. இவற்றை நீங்கள் சொல்லாதத

னால் அந்தந்த ஆசாரியர்களிடத்தில் உங்களுக்கு துவேஷம் என்று சொன்னால் நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா? வழக்கமில்லாதவற்றைப் புதிதாக எப்படி சொல்ல முடியும்? என்பீர்கள். இப்படித்தான் தென்கலையார்களும் சொல்லுகிறார்கள். ஆகவே அவர்கள் தேசிகப் பிரபந்தங்களை ஏன் சொல்லுவதில்லை யென்கிற கேள்வி அசட்டுத்தனமாகவேயுள்ளது. சண்டைக்கென்று புதிதாக ஏற்பட்ட ராமாநுஜாபாத்திரத்தை அவர்கள் ஏன் சொல்லுவதில்லை யென்கிற கேள்வியும் மிகவும் அசட்டுத்தனமானது ஸ்ரீமான் வேங்கடதனியனை அவர்கள் ஆதரித்து வரும்போது அவர்கள் மீது நீங்கள் குறை கூறுவதற்கு நியாயமேயில்லை. ஆகவே நீங்கள் தேசிகரை வடகலை குருவென்பதும் தவறு; தென்கலையார்களை தேசிகத்வேஷிகளென்றும் த்ரோஹிகளென்றும் சொல்லுவதும் தவறு."

என்று பதில் சொல்லித் தெளிவுபடுத்துவார்கள்.

21. தேவாலயங்களில் பழைய ஆசாரமென்பது தனிப்பட்டது. அதற்கு விரோதமாகச் செய்பவர்களை ஆக்ஷேபித்தால் இந்த ஆக்ஷேபம் எதனாலென்று பார்க்கவேணும். புதிது என்கிற காரணத்தினால் ஆக்ஷேபமே யொழிய வேறொன்றினாலல்ல என்று தெளியவேணும். ஆளவந்தார் ஸ்தோத்ரம் அநுஸந்திக்கத் தொடங்கும்போது ஒருவர் ஸ்ரீராமாநுஜருடைய தனியனைச் சொன்னால் ஆக்ஷேபமுண்டாகிறது. இதனால் இந்த ஆக்ஷேபகருக்கு ராமாநுஜரிடத்தில் துவேஷம் என்று சொல்லிவிடுவதுண்டோ? புதிதாகத் தோன்றும் அந்நியான காரியங்களை ஆக்ஷேபிப்பது புதிது என்கிற காரணத்தினாலேயே தவிர, ஆசாரியரிடத்தில் த்வேஷத்தினாலன்று என்பதைத் திடமாகக் கொள்க.

22. தேசிகனுடைய திருவவதாரஸ்தலத்து நிகழ்ச்சியைப்பற்றி இனித் தெரிவிப்போம். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியாருடைய ஸந்நிதிக் கெதிரே யுள்ள தேசிகர் ஸந்நிதி வாசலில் தென்கலைத் திருமண்காப்பு காரைக்கட்டிடமாக இற்றைக்கும் விளங்குவதுபோல தீபப்ரகாச தேசிகஸந்நிதியிலும் தென்கலைத் திருமண்காப்பு விளங்கிக் கொண்டிருந்தது. அப்படியே உள்ளேயும் தென்கலைத் திருமண்காப்புகள் விளங்கிக் கொண்டிருந்தன. சில வடகலையார்கள் வெளித் திருமண்காப்பை மாறுபடுத்த 1874–ஆம்வருடத்தில் தீவிரமான முயற்சி செய்ய, அப்போது ஸ்ரீ காஞ்சியில் வ்யாபகராக விளங்கின திருப்புட்குழி அப்பாஸ்வாமி யென்கிற ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமியும் அந்த முயற்சியில் கலந்து கொண்டனர். அதன்மேல் கிரிமினல் கேஸ் ஏற்பட்டது. மேலே குறித்த திருப்புட்குழி அப்பாஸ்வாமியும் அந்த கிரிமினல் கேஸில் எதிரியாக்கப்பட்டிருந்தார். மிஸ்டர் குரோல் துரையின் முன்னிலையில் பிரபலமான விசாரணை நடந்து 23-10-1874ல் ஜட்ஜ்மெண்டு தோன்றியிருக்கிறது.

இது சம்பந்தமான ரிகார்டுகள் முழுவதும் அச்சாகி கேஸ்களில் தாக்கலாகியுமிருக்கிறது.

23. தற்போது அந்த ஜட்ஜ்மெண்டில் ஒரு பகுதி மட்டும் முக்கியமாக எடுத்து மொழிபெயர்ப்புடன் இதன் கீழ் வெளியிடப்படுகிறது.

CALENDAR OF PERSONS TRIED BEFORE C. S. CROLE ESQUIRE
AG. JOINT MAGISTRATE OF CHINGLEPUT DISTRICT
No. of the Case 72 of 1874

Name and description of the accused :—

I. T. Srinivasavaradschari 1, R. Varadachari 2, Aiya Tirumalaitatachari 3, Sir Krishnatatachari 4. (and 10 others).

IV. Name of Complainant :— Ramanujachari

True copy of last portion of judgment, (matter in brackets inserted for clarification.)

"I have no hesitation in deciding that the account of the affair given by 4th defendant (Sri Krishnatatachari) is a true one. He says that soon after the temple was made over in December last (1873), some Vadagalai, to him unknown, converted the Tengalai Namam in question (large Tengalai Namam in brick and chunam above the main entrance of the Vendanta Desikar shrine of Vilakkadi Koil) into a Vadagalai one by removing the base. It is in evidence that there was no guard placed there at nights, that doors were not even locked and that one man unassisted could easily have climbed up and committed the act during the night without being discovered.

While acquitting the defendants on this charge also I consider that in the interests of peace and order the 4th defendant, as custodian of the fabric of the temple, should lose no time in showing the bonafide of his defence by restoring the mark to its former condition.

The court further remarks with extreme reprehension that the defendan ts or their friends in Madras have sought to bring private influence to bear over the decision of these matters by causing Dr. Stambrough. Health officer of Madras to address to me a letter recommending the defendants to favourable consideration. I can only characterise this as a grievous indiscretion and Dr. Stambrough's conduct as a most grave contempt, the slightest repetition of which will subject the perpetrator to the penalties provided for the offence.

(Sd.) C. S. CROLE,
Ag. Joint Magistrate,
23-10-1874.

செங்கல்பட்டு ஜில்லா ஆக்டிங் ஜாயிண்ட் மாஜிஸ்ட்ரேட்டு
C. S. க்ரோல் துரையவர்கள் முன்பாக விசாரணை நடந்த
C. C. 72 of 1874

பிராதியின் பெயர்: இராமாநுஜாசாரி தென்கலை)

எதிரிகளின் பெயர்: 1. T. ஸ்ரீனிவாஸவரதாசாரி, 2. R. வரதாசாரி,
3. ஐயா திருமலை தாதாசாரி, 4. ஸ்ரீகிருஷ்ண தாதாசாரி,
(இன்னும் 10 பேர்கள்)

தீர்ப்பின் கடைசி பாகத்தின் மொழி பெயர்ப்பு (Bracket களிலுள்ளவை விவரணத்திற்காகச் சேர்த்தவை.)

இந்த விஷயத்தைப்பற்றி நான்காவது பிரதிவாதி (திருப்புட்குழி ஸ்ரீகிருஷ்ண தாதாசாரியார்) கொடுத்த தகவல்தான் சரியானது என்கிற முடிவிற்குத் தயங்காமல் வருகிறேன். அவர் சொன்னதாவது, சென்ற வருஷம் (1873) டிசம்பர் மாதத்தில் இந்த கோயில் (தம்மிடம்) சுவாதீனம் செய்யப்பட்ட உடனே, தமக்குத் தெரியாத, ஏதோ ஒரு வடகலைகபர் தாவா தென்கலை நாமத்தை (விளக்கொளி கோயிலைச் சேர்ந்த வேதாந்தாசாரியரின் சன்னிதி கோபுரவாசலின் மேலுள்ள செங்கலினாலும் சுண்ணாம்பினாலும் கட்டப்பட்டிருந்த பெரிய தென்கலை நாமத்தை) அடியிலுள்ள பாதத்தை இடித்து விலக்கி வடகலை நாமமாக மாற்றி விட்டார் என்பதே. இரவு காலங்களில் அங்குக் காவல்காரன் வைக்கப்படவில்லை என்றும், கதவுகளைப் பூட்டுவதுகூட கிடையாதென்றும், ஒரு மனிதன் யாதொரு உதவியாளுமின்றி இரவில் சுலபமாக மேலே ஏறி, யாரும் கண்டு பிடிக்க முடியாதபடி, இந்த காரியத்தைச் செய்திருக்கக் கூடுமென்றும் சாக்ஷிகள் மூலம் ஏற்படுகிறது. இந்தக் குற்றச் சாட்டினின்றும் (இன்னார் தான் செய்தார் என்று ருஜுவாகாதபடியால்) எதிரிகளை விடுவிப்பதுடன், நாம் என்ன சொல்லக் கருதுகிறோமென்றால், இந்த கோயில் நிர்வாஹம் முழுவதும் தம்முடைய ஆதீனத்திலுள்ள நான்காவது பிரதிவாதி சமாதானம் நிலை நிற்றல் பொருட்டும் ஒழுக்கத்திற்காகவும், இந்த நாமத்தை சிறிதும் காலதாமதமின்றி உடனே பழைய ரீதியாகவே மாற்றியமைத்து, தாம் தண்டனையினின்றும் மீறச் சொன்ன பதிலின் ப்ராமாணிகத்வத்தை வெளிப்படையாகக் காட்ட வேண்டும் என்பதே.

இந்த கோர்ட்டு மிகமிக அருவருப்புடன் இங்குக் குறித்துச் சொல்லுகின்ற மற்றொரு விஷயம் என்னவென்றால், பிரதிவாதிகளோ, அல்லது மதராஸிலுள்ள அவர்களின் சிநேகிதர்களோ, டாக்டர் ஸ்டாம்பரோ என்னும் மதராஸ் சுகாதார அதிகாரியிடமிருந்து, ப்ரதி வாதிகளிடத்தில் நாம் பக்ஷபாதமாக நடந்து கொண்டு அவர்களுக்கனுகுணமாக இந்த கேஸ் விஷயங்களில் தீர்ப்பு செய்யும்படி ஒரு சிபார்சு கடிதம் தருவித்திருக்கிறார்கள் என்பது, இதை நாம் மிகவும் வருந்தத்தக்க மதிகேடு என்றுதான் சொல்லக்கூடும். டாக்டர் ஸ்டாம்பரோவின் இந்த நடத்தை மிகவும் கேவலமாக மதிக்கத்தக்கது. மறுபடியும் இத்தகைய காரியம் சிறிதளவாகிலும் எவர் செய்தாலும் இத்தகைய குற்றத்திற்கென்று விதிக்கப்பட்ட தண்டனைகளுக்கு அவர் உட்படுவர்.

(கையொப்பம்) C. S. குரோல்
ஆக்டிங் ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட்டு
23—10—1874

24. மேலே உதாஹரித்த தீர்ப்பினால் பொதுமக்களுக்கு என்னவுண்மை தெரியவருகிறதென்றால், குரோல் துரையானவர் தன்னிடம் எதிரியாக ஆஜரான திருப்புட்குழி ஸ்வாமியின் வாக்குமூலத்தைப் பிராமாணிகமாக நம்பி, (அதாவது) தேசிகர் ஸன்னிதிவாசலில் காரைக் கட்டிடமாக இருந்த தென்கலைத் திருமண் காப்பை யாரோ இன்னாரென்று தெரியாத சில வடகலையார்கள் அதர்க்கணமாக (தமக்கும் தெரியாதபடி) இடித்துவிட்டதாகவும், பழையபடியே புதுப்பித்துவிடு

வதாகவும் ஒப்புக்கொண்டதை நம்பிப் பிரதிவாதிகளை விடுதலை செய்துவிட்ட தாகத் தெரியவருகிறது. இடிக்கப்பட்ட அந்த தென்கலைத் திருமண்காப்பை முன்போலவே பரிஷ்காரப்படுத்திவைத்தாரென்றும் தெரியவருகிறது.

25. ஆனால் இப்போது அந்தத் திருமண் காணப்படாமல் வடகலை நாமம் காணப்படுவதற்கு என்ன காரணம்? அப்பீலில் மாறிவிட்டதா என்ன? என்று சிலர் கேட்கக்கூடும். மேலே நாம் உதாஹரித்த குரோல் துரையின் ஜட்ஜ்மெண் டின் முடிவு பாகத்தை மறுபடியும் ஒருமுறை வாசித்துப் பார்த்தால் உண்மை விளங்கும். அந்த துரையை எதிரிகள் பிரபலமான சிபார்சுகொண்டு ஸ்வாதீனப் படுத்தப்பார்த்தார்களென்று அருவருப்பைக் காட்டி மிக்க வருத்தத்துடனல்லவா அவர் தம்முடைய தீர்ப்பை முடித்திருக்கிறார்? சிபார்சின் வசீகரமயினால் சிலர்க் குச் சிலவிடங்களில் வெற்றி கிடைக்கின்றது போலும். உண்மையில் இவர்கள் சிலவிடங்களில் சிபார்சுகொண்டே வெற்றி பெற்றிருக்கிறார்களென்பது நிஸ் ஸந்தேஹம். இதற்குமேல் நாம் என்ன எழுதவேண்டும்? ஏதேந ஸர்வம் விசதம். நாம் இந்நூலில் 41-ஆம் பக்கத்தில் முக்கியமான முப்பது வாக்யச்ரேணி களின் விவக்ஷையைத் தெரிவித்து இவ்வளவும் எழுதிவந்தோம். 25 வாக்ய ச்ரேணிகள் முற்றுப்பெற்றுவிட்டன. சேஷித்திருக்கும் ஐந்து வாக்யச்ரேணிகளை லோகாபிராமமாக எழுதி முடிக்கின்றோம். "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்கிற வசனம் நம்முடைய சிந்தனையில் ஊறியுள்ளது. இந்நூலில் நாமெழுதியுள்ளவையெல்லாம் ஸத்யமாயிருந்தாலும் சிலர்க்கோ பலர்க்கோ அப்ரியமாகவேயிருக்கும். இதை நாம் அறிந்துவைத்தும் 'உலகுக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டியது அவசியம்' என்னுமோரெண்ணத்தினாலேயே இவற்றை வெளியிட்டோம்.

26. வடகலை மதத்தைச் சேர்ந்தவரான ஒரு தாதாசாரியர் தாமெழுதி வெளியிட்டுள்ள ஸம்ப்ரதாய ப்ரதீபமென்னும் வடமொழிச் சுவடியில் "நிர்ப்பந்தா தேவ" இத்யாதி வாக்யச்ரேணியில் ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வானை அமுதனார் திரு மாளிகையில் நிமந்த்ரணத்திற்குப் போகவிட்டுச் சூழ்ச்சியினால் ஸ்ரீரங்க தேவஸ் தானக் கொத்துச்சாவியைக் கைப்பற்றின ஐதிஹ்யத்தை எழுதி அந்த ராமாநுஜரே நிர்ப்பந்தத்தினால் கோயிலில் புராதனமான வடகலை நாமத்தை மாற்றித் தென்கலை நாமமாக்கினாரென்றெழுதி, அப்படி ராமாநுஜரால் மாற்றப்பட்டதை மறுபடியும் பழைய நிலைமைக்குக் கொண்டுவர எங்கள் பெரியோர் முயற்சிகள் செய்துவருவது யுக்தமேயென்று முடித்திருக்கிறார் அந்த தாதாசாரியர். இதை நாம் நமது நூல் களில் எடுத்துக் காட்டியுள்ளோம். உலகம் முழுவதும் பார்த்திருக்கிறது. இதை வடகலைப் பெரியார் ஒருவரும் மறுக்காமல் ஆமோதித்து வருகிறார்கள். உடைய வர் காலத்திற்கு முன்னே வடகலைத் திருமண்தான் இருந்ததென்றும், உடைய வரே தென்கலைத் திருமணைப்ரவர்த்திப்பித்தவரென்றும் அந்த தாதாசாரியருடை யவும் அவரைச் சேர்ந்த வகுப்பினருடையவும் ஸித்தாந்தமாகத் தேறி நிற்கிறது. ஸ்ரீராமாநுஜரையன்றித் தெய்வு மற்றறியாதிருந்த தேசிகன் ஸ்ரீராமாநுஜருடைய வழியைவிட்டு வேறு வழியில் சார்ந்திருக்கமாட்டாரென்பதை நாம் சொல்ல வேணுமோ?

27. திருமண்காப்பு விபர்யயத்தை ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து செய்ததாக ஸம்ப்ரதாய ப்ரதீபகாரர் பறைசாற்றிவருவது யுக்தமாயிருக்க

ஔசித்யமில்லை. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் எஞ்ஞான்றுமுள்ளவொரு பத்ததியை நிஷ்கண்டகமாக்கின பெருமைதான் ஸ்ரீராமாநுஜர்க்கு உள்ளது. "ஆரண நூல் வழிச் செவ்வையழித்திடு மைதுகர்க்கு, ஓர் வாரணமாய் அவர் வாதக் கதலிகள் மாய்த்தபிரான், ஏரணி கீர்த்தியி ராமானுசமுனி யின்னுரைசேர், சீரணிசிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே" என்றிருக்குமாசிரியர் அவ்வழக்கில் ஒருகாலும் புகாரென்பது திண்ணம்.

28. பகவத்ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமரான தேசிகனை ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸமருபமாக வழிபடக் கடமைப்பட்டவர்கள். "அகிலஜகந்மாதரம் அஸ்மந்மாதரம்" என்ற கணக்கிலே அவர் எங்களுக்கே ஆசாரியர், எங்களுக்கே ஆசாரியர் என்று யார் கொண்டாலும் ஏற்கும் ஏற்கும் என்னத் தகுமத்தனை. இந்நூலில் நாம் விளக்கின உண்மைகளுக்கு மாறாக விபரீத ஸரணிகளைப் பின்பற்றி திவ்யதேசங்களில் க்ஷோபங்களை வளரச் செய்துகொண்டு போவது பக்திமான்களுக்குப் பாங்கன்று—என்றுரைப்பதுதான் இந்நூலுக்கு ஜீவாதுவான விஷயம். ஒரு வகுப்பினர் கூரத்தாழ்வானிடத்திலே அபரிமிதமான ஈடுபாடுகொண்டு அவரையே தங்களுக்குக் குலதெய்வமாகக் கொண்டால் இதை யாரேனும் தடுப்பாருண்டோ? அதேபோல பட்டரிடத்திலோ மற்றோராசிரியரிடத்திலோ ஈடுபாடுகொண்டு அவரவர்களைத் தம்தமக்குக் குலதெய்வமாகக் கொள்ளுமவர்களையும் தடுப்பாரில்லை. ஆனால், தொன்றுதொட்டுவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய ஸங்கேதங்களைக் கடவாமல் அவற்றையடிபோற்றியே நடந்துகொள்வதுதான் உற்றது. அருளாளப் பெருமானெம்பெருமானாரைக் குலதெய்வமாகக் குலாவுமவர்கள் அவர்களுடைய தனியனையும் வாழித்திருநாமத்தையுந்தான் சொல்லவேண்டுமென்கிற கிளர்ச்சியை ஓரிடத்திலும் உண்டுபண்ணவில்லை. அனந்தாழ்வானையோ எங்களாழ்வானையோ மற்று எந்த ஆசாரியரையோ குலதெய்வமாகக் கொள்ளுமவர்களும் அவர்களுடைய தனியன்களையும் வாழிகளையுமே சொல்லவேணுமென்கிற கிளர்ச்சியையும் இதுகாறும் உண்டுபண்ணியிருக்கவில்லை. இதற்கு என்ன காரணம் தெரியுமோ? தொன்றுதொட்டுவரும் ஆசரணையில் எவ்விதமான க்ஷோபத்தையும் விளைவிக்கலாகாதென்கிற பீதியும், விளைக்கவேண்டிய அவசியமில்லையென்கிற உறுதியுமே காரணம். இவையிரண்டுமில்லாதவர்கள் ஸாஹஸமாகவே பல க்ஷோபங்களை விளைக்க முயன்றார்கள். அதன் பலனை அடிக்கடி கைமேல் கண்டுவைத்தும் சாந்தி பிறவாமைக்குப் பிராமாணிகர்கள் சோகிக்க வேண்டியது தவிர வேறில்லை.

29. அக்காலத்தில் அஸ்மத்குலகூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கராசார்யரும், சிறிது பிற்காலத்தில் சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்யரும் வேதாந்தவாசிரியரிடத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர்களென்பதை இந்த நவீனர்களும் இசைகின்றார்கள். அவ்விருவருடையவும் ஸந்ததி பரம்பரை அநுஸ்யூதமாக வந்துகொண்டிருப்பது ப்ரஸித்தம். ஸ்வாமி தொட்டயாசார்யருடைய ஸந்ததி சோளஸிம்ஹபுரத்தில் விச்ராந்தம். ப்ரதிவாதி பயங்கராசார்யருடைய ஸந்ததி நாற்றிசையிலும் பெரும்பாலும் பரவியுள்ளது. இவ்விரு ஸந்ததிகளிலும் வேதாந்தாசார்யரென்கிற நாமகரணம் வைஷம்யம் முற்றின இக்காலத்திலும் மாறாமல் அநுவர்த்தித்து வருகிறது. இவர்களுடைய குடும்பங்களில் வேதாந்தாசார்ய விக்ரஹாராதனமுமுள்ளது. திருவிந்தளூர் முதலான தென்னாட்டுத் திருப்பதிகளில் வாழும் பிரதிவாதிப்பயங்கர வம்சஸ்தர்கள் தங்கள் பரம்பரையில் நயனாராசார்ய நாமகரணமும் செய்துவருகிறார்கள். இவர்கள் பரிமள ரங்கநாதன் ஸந்நிதியில் வேதாந்தாசார்ய

விக்ரஹ ப்ரதிஷ்டையும் செய்வித்து உத்ஸவ பரிபாலநாதிகளை இற்றைக்கும் ஒழுங்குபட நிர்வஹித்து வருகிறார்கள். நவீனர்களுக்கு அங்கு தேவஸ்தானத்தில் பிரவேசம் இல்லாமையினாலே பாஹ்ய ஸ்தலத்தில் புதிதாக ஆலய நிர்மாணம் செய்வித்துச் சில வருஷகாலமாய்த் தனியான வழிபாடு நடத்தப்பட்டு வருகிறது திவ்யதேசத் தெம்பெருமானுடைய ப்ரஸாத பஹுமானங்களைப்பெற்று ஆனந்தமாக வாழ்கிற ஆசார்யருடைய முன்னிலையில் இப்படியொரு தனிக்கூத்து நடத்த வேணுமென்று தோன்றினது எதனாலோ தெரியவில்லையே. இக்கூத்து ஒன்றிரண்டு ஸ்தலங்களிலன்றே.

30. இத்தகைய தனிக்கூத்துக்குக் காரணத்தை நவீனர்கள் ஒரு விதமாகச் சொல்லி வருகிறார்கள். அதாவது, "தென்கலைத் திருமண் காப்பு சாத்தியும், தென்னாசார்யர்களுடைய மந்த்ரப்ரபந்த வாழி திருநாமங்களைச் சொல்லியும் நடத்தப் பட்டு வருகிற பத்ததி எங்களுக்குப் பிடிக்காமையினாலே நாங்கள் தனிக் கோவில் கட்டிக் குலாவுகிறோம்" என்பதாக. இவ்விஷயம் திருப்பித் திருப்பி விமர்சிக்கப்படுமளவில் தலைவேதனையே யுண்டாகும். தேசிகன் திருநாடலங்கரித்து ஐந்நூறு வருடமாய் விட்டது. ஸகல ஆழ்வார்களும் ஸகல ஆசிரியர்களும் மணவாள மாமுனிகளுக்கு முற்பட்டவர்களே யொழிய பிற்பட்டவர் ஒருவருமிலர். ஸகல ஆழ்வாராசாரியர்களுக்குமுள்ள அனுஷ்டானஸரணிதானே தேசிகனுக்கும் ப்ராப்தமாகும். வேறு பத்ததி எங்கிருந்து எவ்விதமாக வர முடியும்? இந்தக் கிளர்ச்சி திவ்விய தேசங்களில் தேசிக விக்ரஹப்ரதிஷ்டை ஏற்பட்ட காலம் முதலாகவே உண்டாயிருக்குமாகில் சில விமர்ச விசேஷங்களுக்கு அவசியமுண்டாகும். நவீனர்களின் இக்கிளர்ச்சிகளெல்லாம் அதி நவீன காலத்தில்தான் தோன்றியவை யென்பது உறுதி. தோன்றின காலம் முதலாகவே எங்கும் அபராதங்களும் தண்டனைகளுமேயாய்க் காலம் கழிவதால்...இதையெல்லாம் நன்கு ஆராய்ச்சி செய்யவல்ல மத்யஸ்த மேதாவிகள், இவர்களுக்கு நாம் நவீனர்களென்று சாத்திய பட்டமும் கோவில்களில் வீண்விவாத வளர்ச்சிக்காகவே இவர்கள் தேசிகனோடு உறவு கொண்டாட ஆரம்பித்தார்களென்பதும் பிராமாணிகமேயென்று உகக்கத் தட்டில்லை. இவ்வளவும் நாம் ஆர்ஜவத்தோ டெழுதினபடி.... *

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரெழுதிய
வேதாந்த தேசிக வைபவமும் அநுபந்தங்களும்
முற்றுப் பெற்றன.

# விவக்ஷித விசேஷ விநிவேதநம்

ஸ்ரீமத அஹோபிலமடத்தின் மூலமாக 1951 ஆம் வருடத்தில் விசிஷ்டாத்வைத கோசமென்னும் பெயரால் ஒரு நிகண்டு வெளியிடப்பட்டிருக்கின்றது. அதன் குணதோஷங்களைப்பற்றின விசாரம் இங்கு அப்ரஸக்தம். அதன் முகப்பில் உபோத்காதமொன்று, மடத்திற்கு எதிரான ஸம்பிரதாயத்தை யவலம்பித்த வொருவரா லெழுதப்பட்டது சேர்க்கப்பட்டுள்ளது. அதில் "G. கோசः" என்பதற்கு முன்புள்ள பதினெட்டரை பக்கங்கள் இப்புத்தகத்திற்கு அநவஸரங்கள். 'வீண்வம்பு வளர்த்தல்' என்று எண்ணத்தக்கவை. 'அவை அநாவச்யகங்களல்ல; மிகவும் ஆவச்யகங்களே' என்றாலு மென்க. அந்த உபோத்காதமெழுதினவர் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு ஸர்வாத்மநா வைதேசிகர் என்பது ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் ஸுப்ரஸித்தம். நேர்வழியை யறியாதே குடிலமான வழியையே தழுவுபவர் என்பதும் ஸுப்ரஸித்தம். இவ்விருவகை ப்ரஸித்தியையும் இவ்வுபோத்காதத்தில் தாமே விளக்கச் செய்துள்ளார். அதை விவரிக்கப் புகுந்தால் விரிவு பெரிதாம். ப்ரக்ருதம் நம்முடைய இந்த க்ரந்தத்திற்கு வேண்டுமளவான நிரூபணமே செய்து போருவோம். உபோத்காத மெழுதியவர் ஆசார்ய ஸ்ரீஸூக்தி வைதேசிகரென்பதை ஸ்தாலீ புலாக நீத்யா ஒரேவிஷயங்கொண்டு உபபாதிக்கிறோம். "2. குருபரம்பரா (பூர்வா)" என்று மகுடமிட்டு எழுதிவருகையில் ஸேனை முதலியாருடைய தனியனான "ஸ்ரீரங்க சந்த்ரமஸமிந்திரயா விஹர்த்தும்" இத்யாதி ச்லோகம் பூர்த்தியாக எடுத்தாளப்படுகிறது. இது பட்டருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் சேர்ந்தது. ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாம் இந்த சுலோகத்தையே ஸேனைமுதலியாருடைய தனியனாக அநுஸந்தித்து வருகின்றது. இதில் நாலாவது பாதம் "ஸேநாந்ய மந்ய விமுகாஸ் தமசிச்ரியாம" என்பது. இதில் "அசிச்ரியாம" என்பது பட்டருக்கே அஸாதாரணமானதோர் அபூர்வப்ரயோகம். இதற்கடுத்த சுலோகத்திலும் "ஸௌத்ரவதீ மசிச்ரியமம்பாம்" என்று ஸாதித்துள்ளார். அசிச்ரியாம என்றும் ஆசிச்ரியம் என்றுமுள்ள இந்த நிவக்த பதங்களின் ஸ்வரூபத்தைப் பலருமறியார்; பண்டிதர்களுமறியார். 'அசிச்ரயாமः' என்று விஸர்க்கம் சேர்த்தே பலர் கூறுவர்; சிறிது ஆராய்ச்சி பண்ணவல்லவர்கள் இங்கு விஸர்க்கம் வாராதேயென்று ஆலோசித்து 'அதிச்ரயாமः' என்று பாடத்தைத் திருத்துவர்கள். இங்ஙனே க்ஷேபங்கள் செய்வது தவிர 'அசிச்ரியாம' என்பதுதான் உண்மையான பதஸ்வரூபமென்று கண்டறிந்து அநுஸந்திப்பார் மிகச்சிலரே.

ப்ரக்ருத உபோத்காதகாரர் தம்முடைய இருளையும் மருளையும் தாமறியகில்லாது அஸ்தாநே பிறரை சிக்ஷிப்பவராதலால் தம்முடைய சிக்ஷணீயத்வத்தைத் தாம் உணரகில்லார். ப்ரக்ருத தனியன் சுலோகம் தமக்கும் நித்யாநுஸந்தேயமென்பதைத் தாம் அபலபிக்கலாகாது. 'அசிச்ரயாம' என்று பதிப்பித்தவர் இதனை லோடுத்தம பஹுவசக ரூபமாக மருண்டார்போலும். உண்மையில் இது லுங் உத்தம பஹுவசனரூபம்,

'அசிச்ரியாம' என்பதே ஸாதுவானரூபம். ப்ரக்ருதத்தில் இவர்க்கு விவக்ஷிதமான விஷயத்திற்கு இந்த சுலோகம் பூர்த்தியாக உதாஹரிக்கப்பட வேண்டியதுமில்லை. இவருடைய மருளை உலகறியச் செய்யவே தெய்வம் செய்வித்தது. இவர் பூர்வாசார்ய ஸூக்தி வைதேசிகரென்பதற்கு இவ்வளவு நிரூபணம் போதும். ப்ரக்ருதம் இந்நூலில் இவ்விஷய ப்ரஸ்தாவம் எதுக்கென்னில்; அடுத்த விஷயமே இங்கு முக்கியம். அதற்கு இதை அவதாரிகா ரூபமாகக் கொள்க. அந்த முக்கியமான விஷயம் கேண்மின்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்து குருபரம்பரையை விரிவாக ப்ரஸ்தாவிக்கிறாரிவர். பெரியபெருமாள் தொடங்கி ஸ்ரீபாஷ்யகாரர் வரைக்கும் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் பொதுவான பரம்பரையே. தனியன்களும் பொதுவானவையே. ஆனால் சில வகுப்பினர் பழைய தனியன்களின் அநுஸந்தான க்ரமத்தை விட்டுப் புதிய க்ரமத்தை ஏறிட்டுக் கொண்டிருப்பதால் அந்த க்ரமத்தையே இவ்வுபோத்காதகாரர் தழுவியுள்ளார். 1. ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ: 2. நமச் ஸ்ரீரங்க நாயக்யை. 3. ஸ்ரீரங்க சந்த்ரமஸம். 4. மாதா பிதா யுவதய:. 5. நமோ சிந்த்யாத்புதாக்லிஷ்ட. 6. நம: பங்கஜ நேத்ராய. 7. அயத்நதோ யாமுநம். 8. யத்பதாம் போருஹத்யாந. 9. கமலாபதி கல்யாண. 10. யோநித்யச்யுத. என்னுமிந்தத் தனியன்களே அஹோபிலமடத்து ஸம்பிரதாயத்திலுங்கூட அநாதியாய் அநுஸந்திக்கப்பட்டுவருமவை. புராதனமான மடத்துத் தனியன் புத்தகங்களிலும் இந்தத் தனியன்களே வெளிவந்துள்ளவை. இற்றைக்கும் பிராமாணிகர்களான மடத்து சிஷ்யர்கள் இந்தத் தனியன்களைத்தான் அநுஸந்தித்து வருகிறார்கள். உபோத்காதகாரர் நவீன ஸம்ப்ரதாயஸ்தரானாலும் மடத்து ஸம்பிரதாயத்திற்குச் சார்பாக எழுதக் கடமைப்பட்டவர் விபரீத குஸ்ருஷ்டிகளிலே கைவைப்பது தகுதியற்றது. அந்த ப்ராமாணிக தனியன்களை ஈஷத்தும் தொடாமல் "ஸ்ரீதேசிக க்ருதாநி இமாநி தநியக்பத்யாநி" "தநியக்பத்யம் ஸ்ரீதேசிக க்ருதம்" "ஸ்ரீதேசிக க்ருதமேவ தநியக்பத்யம்" என்றிட்டு வெவ்வேறு தனியன்களை நுழைத்திருக்கிறார். 'ஸ்ரீதேசிக க்ருதம்' என்பதனால் நமக்கு ஈஷத்தும் மாச்சரியமில்லை. அந்த தேசிகனும் அநுஸந்தித்தருளின தனியன்களை விட்டிட்டு, நவீனகாலத்தில் ஏதோ காரணார்த்தமாக ஒரு வகுப்பினர் ஏறிட்டுக்கொண்ட தனியன்களை மடத்துப் புத்தகத்தில் ஏறிடுவது அந்யாய்யம். இதை மடத்தார் (இக்காலத்தவர்கள்) அபிநந்தித்தாலுங்கூட அந்யாய்யமென்பதில் தட்டில்லை. இது கிடக்க.

ஸ்ரீபாஷ்யகாரர்க்குப் பிறகு பிரியலுற்ற குருபரம்பரை இருவகைப்பட்டது. அதில், எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆக இவ்வாசாரியர்களளவும் பரம்பரை தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களுக்கும் அஹோபிலமடத்தவர்களுக்கும் பொதுவானது—சிறிதும் வேறுபடாததென்க. உபோத்காதகாரருக்கு இந்த பரம்பரை அநாதரணீயமானாலும் மடத்துக்குச் சார்பாக

எழுத முன்வந்தபோது அதனை வெறுக்கவும் ஒதுக்கவும் நியாயமில்லை. ஆயினும், நவீனர்களாதரிக்கும் பரம்பரையையே ப்ரதான கோடியில் எழுதிவைத்து, (அப்பால்) எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை என்று மாசாரியர்களை ப்ரஸ்தாவித்துள்ளார். இது வழியல்லா வழியென்று கண்டிக்கக் கடமைப்பட்டவர்கள் அந்த மடாதிபதிகள். அவர்கள் இசைந்திருக்க இதைப்பற்றி நமக்கென்ன கவலை? 'ஏற்றி மனத்தெழில் ஞானவிளக்கை யிருளனைத்தும், மாற்றினவர்க்கொரு கைம்மாறு மாயனுங் காணகில்லான், போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ், சாற்றி வளர்ப்பதும் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே" என்கிறபடியே ஆசாரியர்களின் தனியன்களை யநுஸந்திப்பது தவிர வேறு தஞ்சமில்லை நமக்கு. அவற்றை ஆக்ரஹவிசேஷங்களாலே யதேஷ்டமாக விடுவதும் மாற்றுவதும் நரகஹேது வென்பதை விவேகிகள் நன்கறிந்துள்ளார்களாதலால் இந்த மாறுபாடுகளைப்பற்றி நமக்கு யாதொரு கரைதலுமில்லை. எதையும் மாறுபடுத்தவே ஒரு வகுப்பு முன்வந்ததென்று மூதலித்தோமத்தனை.

ப்ரக்ருதமான நமது நூலுக்கு மிகவும் அவசியமான விஷயமொன்று காட்டி நிற்கின்றோம். ஸ்ரீபாஷ்ய-காரரிடமிருந்து பிரியலுற்ற மற்றொரு பரம்பரையை (பக்கம் 5ல்) ப்ரஸ்தாவிக்கின்ற உபோத்காதகாரர், திருக்குருகைப்பிரான் பிள்ளான், எங்களாழ்வான், நடாதூரம்மாள், கிடாம்பியப்புள்ளார், ஸ்ரீமத் வேங்கடநாதார்யர் என்று காட்டிவருகையில் இவர்களுக்குத் தனியன்களையு மெழுதுகிறார். நடாதூரம்மாளுடைய தனியன் "ச்ருத ப்ரகாசிகாரம்பே ஸ்ரீஸுதர்சந ஸூரிணா க்ருதம் * வந்தேஹம் வரதார்யம் தம் ........." என்றெழுதினார். அதன் பிறகு ஆத்ரேய ராமாநுஜாசார்யரென்கிற கிடாம்பியப்புள்ளாரை ப்ரஸ்தாவித்து "நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்த ப்ரதாயிநே, ஆத்ரேய பத்ம நாபார்ய ஸுதாய குணசாலிநே" என்கிற சுலோகம் இவருடைய தனியனாக வெழுதப்பட்டுள்ளது. கிடாம்பியப்புள்ளாருடைய உண்மையான தனியன் எது என்பதை அடுத்தபடியாக விளக்குவோம். பெரிய பெருமாள் தொடங்கி ஸகலாசாரியர்களுக்கும் "தநியக் தேசிக க்ருதம்—தநியக் ஸ்ரீதேசிக க்ருதம்—தநியக் தேசிக க்ருதமேவ" என்றிப்படி சோம்பாமல் எழுதிவருமிவர் இந்த * நமோ ராமாநுஜார்யாய தனியன் இன்னார் செய்ததென்பதை எழுதியிருக்க வேண்டாவா? அப்புள்ளார்க்கு ஆசார்யரான அம்மாளுடைய தனியனுக்குக் கர்த்தாவை எழுதிவிட்டு இதற்குமட்டும் கர்த்தாவைப் பற்றின ப்ரஸ்தாவமே செய்யாத காரணமென்ன? இருபது முப்பது வருஷகாலமாக நாம் நம்முடைய நூல்களில் இத்தனியனைப்பற்றி ப்ரபல விசாரம் செய்திருக்கிறோம். அதை யிவர் பாராதவரல்லர். நவீனர்களின் பலபல குஸ்ருஷ்டிகளை நாம் இந்த ச்லோக மொன்றுகொண்டே அப்ரகம்ப்யமாக ஸ்தாபித்து வருகிறோம். அதை மீண்டு ஸம்க்ஷேபமாகத் தெரிவித்து இந்த நிவேதனத்தைத் தலைக்கட்டுகிறோம்.

கிடாம்பியப்புள்ளார் ஸ்ரீ நிகமாந்த மஹாகுருவுக்கு ஸாக்ஷாதாசார்யர். அவர்க்குத் தனியன் செய்யவேணுமென்றால் தச்சிஷ்யரான ஸ்வாமியே செய்திருக்கவேண்டும். ஸ்வாமி செய்தருளின தனியன் "யஸ்மாதஸ்மாபிரேதத் யதிபதி கதித ப்ராக்தந ப்ரக்ரியோத்யத்" இத்யாதியான பரமகம்பீர மஹாச்லோகம் ப்ரஸித்தமாகவுள்ளது. இதுவே என்றும் அநுஸந்தான பரம்பரையிலுள்ளது. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபத்திலும் *நமோ ராமாநுஜார்யாய தனியனே சொல்லப்பட்டு வருவதாக உபோத்காதகாரர் எழுதியிருப்பது பெரும்புளுகு. வ்யபதிஷ்டரான ஒரு மஹானும் இதை இசையார். ஸ்வாமி ஸாதித்த தனியனைத் தள்ளி இந்த ச்லோகத்தைக் காலக்ஷேப பரம்பரையில் கூட்டிக்கொள்ள முன்வந்தவர் இதுகாறும் ஒருவருமில்லை. ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனுக்குப் பிரதியாக ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை ஸ்ருஷ்டித்தவர்கள், *நமச் ஸ்ரீசைல நாதாய தனியனுக்கும் பிரதியாக *நமோ ராமாநுஜார்யாய தனியனை ஸ்ருஷ்டித்தார்களென்பதில் என்ன ஸந்தேஹம்? ஸ்ரீமாக் வேங்கடநாதார்ய தனியனில் சில குறைகள் கண்டு ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் செய்யப்பட்டதாகச் சொல்லி வருவதோடு நில்லாமல் எழுதியும் வைத்திருப்பவர்கள் இந்த நமோ ராமாநுஜார்யாய தனியனைப் பற்றியும் அவசியம் பேசவேண்டுமே. உபோத்காதகாரருக்கு இதை தேசிக க்ருதமாக எழுதத் துணிவு பிறக்கவில்லை. அப்பாசார்ய க்ருதம், குப்பாசார்ய க்ருதம்.......... என்றெழுதிவைக்கவும் கைவரவில்லை. கோவிற் சண்டைகளைக் கிளப்பின காலத்தில் சில அவ்யபதேச்யர்கள் போட்டிக்காக எழுதி வைத்ததென்னு முண்மையே ஸ்திரீக்ருதமாயிற்று. அப்புள்ளாரும் தேசிகனும் ஜீவித்திருந்த காலம் வரையில் இந்த ச்லோகம் தலைகாட்டிற்றில்லையென்பது நிச்சிதம். பிறகு எப்போது தோன்றிற்று? இதற்குக் கர்த்தா யார்? என்கிற விசாரத்தை ப்ராமாணிகர்களனைவரும் செய்யக் கடமைப்பட்டவர்கள். செய்யுமளவில் நம்முடைய ஸித்தாந்தமே அப்ரதிஹத ஸித்தாந்தமாய்த் திகழும்.

தனியன்களை யதேஷ்டமாக மாற்றுவதென்பது பெரும்பாதகமான செயல் என்பதைத் திடமாக வுணரவேணும். நம்மாழ்வாருடைய *மாதாபிதா தனியனையும், உடையவருடைய *யோநித்ய மச்யுத தனியனையும் விட்டு வேறு தனியன்களைப் பரிக்ரஹித்தது கி.பி. 18 அல்லது 19-வது நூற்றாண்டிலேயொழிய அதற்கு முன்பு அல்ல. முன்னமே மாற்றியிருந்தால் திவ்யப்ரபந்தப் பொதுத் தனியன்களின் அநுஸந்தானத்தில் *மாதாபிதாவும் *யோநித்யமும் இவர்களுக்கு வந்திருக்க அவகாசமே யில்லை. முழுவதும் விச்வாமித்ர ஸ்ருஷ்டி யென்பதை ஒவ்வொரு விஷயமும் மூதலிக்கும். ... ... ... ... *

— முற்றிற்று —